உ

கடவுள்துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவர்திருவாய்மலர்ந்தருளிய

# அபிமன்னன்சுந்தரிமாலை.

இஃது

சரவணபுரம்

சண்முகமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு

புரசபாக்கம்.

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

1888

கடவுள்துணை.

# அபிமன்னன் சுந்தரிமாலை.

## விநாயகர்துதி.

### வெண்செந்துறை.

அத்திமுகவா அரனார்திருமகனே
சத்தியின்புத்திரனே சரிந்தவயிற்றோனே
அரவணியும்வேணி அரனார்திருமகனே
நீறணியுங்கங்கை நீள்சடையோன்புத்திரனே
வானவர்கள்பூசைசெய்யும் மதயானைக்கன்றனே
ஆனைமுகத்தோனே ஐங்கரனேநின்சரணம்
ஓரானைக்கன்னே உமையாள்திருமகனே
காரானைமாமுகனே கண்ணன்மருகோனே
மூவருக்குமுன்பிறந்த மூர்த்தியேமுன்னடவாய்
யாவருக்குமுத்தி யருளும்பெரியோனே
தேவருக்குந்தேவனே தெவிட்டாததெள்ளமுதே
அபிமன்னன்தன்கதையை அடைவாகயான்படிக்க
கவிமுன்னேவந்துதவும் கற்பகமேமுன்னடவாய்
சுந்தரிதன்கலியாணம் தொந்தமாய்ப்பாடுதற்கு
எந்தனிடநாவில் இருந்தருளும்நாயகனே
பாட்டினிசையறியாப் பாலனுரைத்ததமிழ்
ஏட்டினிடமாக இருந்தருளும்நாயகனே
சிறுபெண்கள்வேண்டி தீம்பால்மிகப்படைக்கும்
சிறுபெண்கள்வேண்டி திருட்டரிசிகுத்திவிற்கும்
அறிவுடையோர்வேண்டி அரியதவங்கள்செய்வார்
மன்னவர்கள்வேண்டி மகாபூசைசெய்வார்கள்
எனக்குமொருமுகமாய் இரங்கும்பெரியோனே
சொர்க்கம்போவோர்க்குத் துணையாயுதவிசெய்வீர்
வர்க்கம்பலகாரம் வாங்கும்பெரியோனே
அப்பமெழுநூறும் அதிரசங்கள்தொண்ணூறும்
செப்பரியவெள்ளுருண்டை சேரநூறாயிரமாம்
படைக்கநல்லபச்சரிசி பதினாயிரக்கலமாம்

கூனோடேபாகும் குடத்தோடேசற்கரையும்
தேனோடேசெந்தினைமா தேவாவமுதமுடன்
செங்கரும்புரஸ்தாளி சீனிப்பலாப்பழமும்
தேங்காய்க்கொழுக்கட்டைதிரளானபாணக்கமும்
மாங்காய்விளாங்கனியும் மாதுளநற்கனியும்
ஓங்காரமாகவே ஒளிவாணஐங்கரற்கு
பாங்காகநீர்சொரிந்து பத்தியுடனைங்கள்முன்
தீதில்லாச்சாம்பிராணி தீபதூபந்தான்கொடுத்து
அபிமன்னன்தன்கதையை அன்பாகயான்படிக்க
வந்தருளவேணுமையா மாயவனார்தன்மருகா
ஓரானைக்கன்றே உமையாள்திருமகனே
காரானைக்கன்றே கணபதியேமுன்னடவாய்

முருகர்தோத்திரம்

சீரானமாமுகனே சிறப்புடையவேலவனே
மாயோன்மருகோனே வள்ளிமணவாளா
கந்தனேயெந்தனிட கவலையெல்லாந்தீர்த்தோனே
அபிமன்னன்மாலையிடு அருமுகனேயான்பாட
புத்திகளைநீகொடுத்தால் புகழ்ச்சியாய்நான்படிப்பேன்

கதையின்வரலாறு

பஞ்சவர்களைவரும் பாராளும்நாளையிலே
அஞ்சலுடன்பெருமாள் அவனியெல்லாமாளுகையில்
வஞ்சனைகள்செய்பு மன்னன்திரியோதிரனும்
அஞ்சாதமன்னவர்கள் அரசாளும்நாளையிலே
மாயன்பெருந்தேவி மங்கையலர்மேலும்
ஆணலழகன் அருச்சுனன்தன்தேவி
பெருமாளுடன்பிறந்த பெண்ணாம்சுபத்திரையும்
துவாரகாபுரிதனிலே சூதமாய்த்தானிருந்து
தலைமுழுகப்போக தாமிருவர்வருகையிலே
அந்தகுளத்தருகே ஆலவிருட்சமுண்டு
விருட்சத்தருகாக விக்கினருந்தானிருக்க
மாடுகள்மடக்கிமாயன் மந்தையிலேவந்துநிற்க
சூட்சமாய்வார்த்தையொன்று சொன்னாள்சுபத்திரையும்
அண்ணனிடதேவியனை அவளைமிகவழைத்து
மதனியரோநாமிருவர் வந்தோந்தலைமுழ்க

இந்தமுழுக்குடனே ஈஸ்பரனார்தன்செயலால்
அலர்மேலுமங்கையமே ஆண்பிறந்தானுன்வயற்றில்
உன்மகனுக்கென்மகளை உகந்துகொடுப்பேனான்
என்வயிற்றிலாண்பிள்ளையும் உன்வயிற்றில்பெண்பிறந்தால்
என்மகனுக்குன்மகளை யீன்றிடவேணுமென்று
இப்படிக்குச்சம்மதியோ யென்றாள்சுபத்திரையும்
அப்படியேசம்மதிதான் என்றாள்அலர்மேலும்
நிர்பயமாய்ப்பேசி நிதானமிட்டாரந்நேரம்
சுபத்திரையும்லட்சுமியும் சொல்லிசபதமிட்டார்
இந்தச்சபதம் இனிதப்பிப்போகாது
சந்தோஷவார்த்தைக்குச் சாட்சிவைக்கவேண்டுமென்றார்
இருவருஞ்சம்மதித்து இசைந்தார்கள்சாட்சிவைக்க
ஆலடிப்பிள்ளையமே ஆனைமுகத்தோனே
இருவரும்நாங்க ளிசைந்துசொன்னவார்த்தைக்கு
சாட்சியாய்நீயிருந்து தற்காக்கவேணுமையா
ஐங்கரனார்தன்னுடனே ஆலமரம்சாட்சியென்றார்
ஆகாயவாணியரும் ஆட்டிடையாநீசாட்சி
பூலோகமாதாவே புவியம்மாநீசாட்சி
ஐந்துபேர்சாட்சி அடைவாகவைத்தார்கள்
நாத்தியரும்நாத்தியரும் நலமாய்குளக்கரையில்
வார்த்தைகள்தான்பேசி வலக்கைகள்தான்போட்டு
ஆணையுஞ்சத்தியமும் அதற்கேற்றபத்திரமும்
பூணிக்கையாகவேதான் பேசியவர்நிதானமிட்டார்
சம்மதம்பேசியங்கே சந்தோஷந்தானாகி
தலைமுழுகவேணுமென்று தாமிருவாப்பொழுது
சுபத்திரையும்லட்சுமியும் சொகுசாய்தலைமுழுகி
விபூதிபூசியவர் வெண்ணீறுதானணிந்து
மாயனைஅண்ணனை மனதிலேதானினைந்து
தோத்திரங்கள்பண்ணி துதித்தாள்சுபத்திரையும்
தங்கையுபதேசம் தானறிந்தார்மாயவரும்
ஆயன்பெருமாளும் அப்படியேதானிருந்தார்
அப்படியேதான்போனார் ஆதிசிவன்பக்கலிலே
செப்பமுடன்போற்றிசெய்து சிவனாரைத்தோத்தரித்து
என்-தங்கைசுபத்திரைக்கு சந்தானங்கொடுமென்று

மகாதேவர்தன்பாதம் வணங்கியேகேட்கலுற்றார்
அரனார்மிகநகைத்து ஆயன்முகம்நோக்கி
உம்முடைய-தங்கைசுபத்திரைக்கு சந்தானமில்லையென்றார்
மைந்தருமில்லையென்று மகாதேவர்தானுரைத்தார்
அப்போதுமாயவரும் அரனாரைப்போற்றிசெய்து
பதினாறுதன்வயது பாரிலேதானிருக்க
உகமையுடன்பாலனைத்தான் உதவநீர்வேணுமையா
அதினளவுசக்கரத்தை அடைவாகவைக்கிறேனான்
ஆண்பிள்ளையும்பெண்பிள்ளையும் அனுக்கிரகம்பண்ணுமையா
என்றுசொல்லிசக்கரத்தைக் கொடுத்தார்பெருமாளும்
அடகுக்கடவாய் அபிமன்னன்தான்பிறக்க
அபிமன்னன்தேவியென்று அலர்மேலுதன்வயிற்றில்
பெண்ணும்பிறக்க பெருமாள்வரங்கேட்டு
ஆண்பிள்ளையும்பெண்ணுமாய் ஆசையுடன்தான்பிறக்க
ஆதிசிவன்கையால் ஆனவரம்பெற்றுவந்தார்
இப்படியாயங்கே இசைந்துவந்தநாளையிலே
துவாரகாபுரியைவிட்டு சுபத்திரையுமப்போது
ஆனைகுந்திபட்டணத்தே அங்கோரம்போய்ச்சேர்ந்தார்
ஆணழகுமன்னன் அர்ச்சுனனார்தன்னுடனே
இந்தவிசேஷமெல்லாம் இளங்கொடியாள்சொன்னாளே
நல்லதென்றுஅருச்சுனரும் நாயகியுந்தானிருந்தார்
அதுவேகுளியாக அர்ச்சுனனார்தேவியற்கு
சுபத்திரையாள்தன்வயற்றில் சுவாமிகிருபையினால்
கெற்பந்தரித்து கிளிமொழியாள்தன்வயிற்றில்
அலர்மேலுமங்கையர்க்கு அப்போதரித்ததுகாண்
அருச்சுனர்தேவியர்க்கு ஐந்திரண்டுஞ்சென்றதுகாண்
பத்துமாதஞ்சென்றபின்பு பாலன்பிறந்தானே
அபிமன்னன்பிறந்தானே ஐந்துதிங்கள்முன்னாக
ஐவர்வனவாசம் போனார்களப்போது
வனவாசம்போனபின்பு வஞ்சிசுபத்திரைக்கு
பாண்டவர்கள்பூஷணங்கள் பண்டாரம்பெட்டியெல்லாம்
கணக்காகவப்போது களஞ்சியத்திற்போட்டார்கள்
பத்திரமாய்த்தான்கொடுத்து பயணமாய்ப்போனார்கள்
பஞ்சவர்கள்நாடுவிட்டு வனவாசம்போனபின்பு

ஐந்தாந்தான்மாதத்திலே அபிமன்னன்தன்னுடனே
அண்ணனுடமாளிகைக்கு வந்தாள்சுபத்திரையும்
வண்ணமுடனண்ணனிடமலர்பாதந்தெண்டனிட்டு
மைத்துனனபிமன்னனு மலர்பாதந்தெண்டனிட்டு
சாஷ்டாங்கந்தெண்டனிட்டு சுவாமியெடுத்தணைத்தார்
அபிமன்னராஜாவே ஐயாவேவந்தீரோ
வந்திதீரோவந்திதீரோ மருமகனேவந்தீரோ
மருமகனைதான்வாழ்த்தி வரிசைஉடமையெல்லாம்
பிரியமுடன்தான்பூட்டி பூரித்தார்மாயவரும்
அலர்மேலுமங்கை அரண்மனைக்குபோவோமென்றார்
சேலையழகியுஞ் சென்றாள்திருமனைக்கு
அண்ணனிடதேவியரே அலர்மேலுமங்கையரே
நன்றாயிருக்கிறீரோ நாயகியேயென்றுசொல்லி
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
ஒருவர்க்கொருவர் யுகந்துஉலாவாடி
நாதன்முகம்நோக்கி நாயகியாள்லட்சிமியும்
பெற்றுபிழைத்தீரோ பொற்கொடிநாயகியே
ஆண்பிள்ளைபெற்றீரோ ஆசையெல்லாம்தீர்த்தீரோ
என்றுசொல்லிபேசி இருந்தாரேயிருவருமாய்
அபிமன்னராஜனுக்கு அனேகஉடமையெல்லாம்
சரசமுடனப்பொழுது தரித்தாளேலட்சுமியும்
இப்படியாய்த்தான்மகிழ்ந்து இருக்குமந்தநாளையிலே
அலர்மேலுமங்கையர்க்கு ஐயிரண்டுசென்றதுகாண்
பத்துமாதஞ்சென்று பைங்கிளிக்குப்போதாச்சு
சுத்திக்கணபதியை சங்கரனைதோத்தரித்து
சாஸ்திரங்கள்யாவும் சதிரானலட்சணமும்
பார்த்துமகிழ்திருக்க பஞ்சாங்கம்சொன்னார்கள்
தாதிகளுமப்பிகளுந் தாந்தரமாய்வந்துநிற்க
மருத்துவச்சிவண்ணாத்தி வந்துமகிழ்ந்துநிற்க
அரிவைசுபத்திரையும் அண்டையிலேவந்துநிற்க
இடுப்புமுதுகுகண்டு ஏகமாய்தான்பிடிக்க
பருவமாயெல்லோரும் பக்கத்தில்வந்துநிற்க
இப்படியாயங்கே இருக்குமந்தவேளையிலே

அலர்மேலுமங்கையரும் அரிவையைப்பெற்றாளே
பெற்றாளேபெண்ணை பெருமாள்பெருந்தேவி
(அப்போ) சுத்தமுள்ளகன்னி சுபத்திரையுந்தான்மகிழ்ந்தாள்
தொப்புள்கொடியறுக்க தோகைசுபத்திரையும்
கொடுத்தாளாம்ஆயிரம்பொன் கொம்பனையாளப்பொழுது,
வாய்துடைக்கஆயிரம்பொன் வைத்தாள்சுபத்திரையும்
பெண்ணைமுழுகாட்டி பீதாம்பரப்பட்டுடுத்தி
அபிமன்னன்தேவியென்று அணிந்தாள்விபூதிதன்னை
ஆனையின்மேல்பேரிகை அடித்தாரேஅந்நேரம்
சுந்தரிக்கும்பாலனுக்கும் சொன்னபடிவந்ததென்று
இந்திரரும்தேவரும் எங்குமறிந்தார்கள்
வந்தபிராமணற்கு மகாதானம்தான்கொடுத்தார்
விதைநெல்லுகோட்டைகளும் மெல்லியர்க்குத்தான்வழங்கி
கோதானம்பூதானம்கொடுத்தார்களனேகமெல்லாம்
பாடகர்புலவருக்கும் பரதேசிதாதருக்கும்
கட்டுப்புடவைகளும் கனமாகத்தான்கொடுத்தார்
பதினாறுநாளையிலே பைங்கிளிக்கிதொட்டிலிட்டு
நினைத்தாள்சுபத்திரையும் நிதானமிட்டாளந்நேரம்
பட்டணத்திலுண்டான பார்மன்னரனைவருக்கும்
வெற்றிலையும்பாக்கும் விரும்பியிடச்சொன்னாளே
அப்படியேதான்செய்து ஆதரவாய்ச்சொன்னாளே
விருந்துசமையுமென்றாள் மேலானமன்னவற்கு
பொருந்தும்பொரிக்கரியும் புத்துருக்குநெய்பாலும்
அறுபத்துநாலுவகை அதிரசமும்அப்பளமும்
மாங்கனியுந்தேங்கனியும் வாழைப்பலாக்கனியும்
சீனிமணல்பாகும் திரட்டுபலாசர்க்கரையும்
சகலவகைக்கறியும் சமைத்துவிருந்துமிட்டாள்
அறிவானசுந்தரிக்கு மாணிக்கத்தொட்டிலிட்டாள்
சுபத்திரையாள்உடைமைநகை சிங்காரித்தாள்சுந்தரிக்கு
மகாராசன்தேவியென்று மஞ்சணீராட்டிவைத்தாள்
அபிமன்னன்தேவியென்று அனைவருக்குஞ்சொன்னாளே
இப்படியாயங்கே இருக்குமந்தநாளையிலே

சேனைதானைச்சுமந்தன் சித்தமிரங்காதோ
தாயாரைவாருமென்று தப்பிவழைத்தானே
அண்ணனுடன்சொல்லி அனுப்பிவிடைபெற்றுக்கொண்டாள்
பெண்பெருமாளட்சுமியும் போய்வாருமென்றுமே

சுந்தரிக்கு சுபத்திரை புத்திசொல்லுகிறது

சுந்தரியைப்பார்த்து சுபத்திரையும்அப்பொழுது
வாரியெடுத்து மருமகளைமுத்தமிட்டாள்
ஊருக்குப்போய்வாறேன் உகந்தமருமகளே
மைத்துனன்மேலாசை மறக்காதேவஞ்சியரே
ஆசைமருமகளே அபிமன்னன்தேவியரே
அப்படியேயாகுமென்று அண்ணனுடன்சொன்னளே
பாம்பின்மேல்பள்ளிகொள்ளும் பாசாருந்தன்மகளே
அல்லிவெண்பெண்மயிலே அன்னமேஆரணங்கே
இருவருங்கூடி இன்றுவிருந்தீர்கள்
ஆனைகுந்திபட்டணத்தே அமர்ந்திருக்கப்போய்வாரேன்
போய்வாரோமென்று புறப்பட்டாள்பூவையரும்
தோகையிளமயிலாள் சுந்தரியும்பாலனுமே
ஏகமாய்த்தான்பேசி எனக்கென்னபுத்தியென்றான்
அந்தமுள்ளசுந்தரியைஅணைத்துமுத்தந்தானுமிட்டாள்
சிந்தைகலங்கிசிவசிவாவென்றுசொல்லி
மைத்துனனைதான்பார்த்து மயங்கியழுதாளே
பாலனும்அப்பொழுது பார்த்துஅழுதானே
கண்டாள்சுபத்திரையும்கடுகெனவேவோடிவந்து
கண்ணைத்துடைத்து கனிவாயைமுத்தமிட்டு
தேறுதலையாக திட்டஞ்சொன்னாள்சுந்தரிக்கு
ஆதரவாய்ச்சொல்லி அனுப்பவிடைபெற்றுக்கொண்டாள்
மாமியார்காலில் மருமகளும்தெண்டனிட்டாள்
வாழ்த்திவிடைகொடுத்தாள் மாயனுடன்பிறந்தாள்

சுபத்திரையும் அபிமன்னனும் ஆனைகுந்தி
பட்டணத்தைப்போய்ச்சேர்ந்தது.

தாதிகளுஞ்சூப்பிகளும் தண்டிகைகளைகொண்டுவந்து
பல்லக்கிலேறுமென்று பாங்கிமார்தெண்டனிட்டார்
உற்றநல்முறையோர் ஊரிலுள்ளதங்கையரும்
மெத்தமெத்தசொல்லி விடைகொடுத்தாரப்போது
ஏறினால்பல்லக்கில் யியலானபசுங்கிளியும்
பாலனைதானெடுத்துப் பல்லக்கில்வைத்தார்கள்
கொட்டிமுழக்கினார்கள் கோடையிடிபோல
வட்டமிட்டுக்கொட்டினார் வஞ்சியர்களெல்லோரும்
துரிதமுடனடந்தார் துவாரகாபுரியைவிட்டு
இஞ்சிவனங்கடந்தாள் எலுமிச்சையுங்கடந்தாள்

மஞ்சள்வனங்கடந்தார்பாதிவழிகடந்தார்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
பஞ்சவர்நாட்டிலேதான் பைங்கிளியும்வந்தாளே
இந்தப்பேரரசாளும் ஆனைகுந்திபட்டணத்து
வந்துசுபத்திரையும் வந்தாளேமாளிகைக்கு
தம்பிஅபிமன்னனுக்கு சலங்கைகள்தானுடு
பாலமிர்தமூண்டு பசிதீர்த்திட்டபாடு

(அபிமன்னனுக்கு தாதிதோழமாரை அழைப்பித்துவைத்தது)

தானமுதுகொண்டு சதிராயிருந்தாளே
பாலனுக்குத்தோழன்மாரை பட்டணத்தில்தான்தேடி
பாலனைப்போல்நூறுபேரை பார்த்தழைத்துவந்தார்
தோழன்மார்தங்களுக்கு சொன்னாள்சுபத்திரையும்
தம்பியைவிட்டுநீங்கள் தனியேபிரியாமல்
அபிமன்னராஜனை அவனைப்பிரியாமல்
இவனுடன்தம்பியைக் காத்திருங்கள்தானுமென்று
அன்னமும்பாக்குமபிமன்னனுடன்கொள்ளுங்கள்
அவன்தரிக்கும்பூஷணங்கள் ஆடைபரிசைதந்து
வகைவகையாய்ப்பின்னோகட்டு மாதுகொடுத்தாளே
தினம்தினம்தம்பியர்க்கு சிலம்பங்கள்செய்யுமென்று
அஸ்திரசஸ்திரங்களெல்லாம் அடவாகக்கற்கவென்று
இப்படியாய்ச்சொல்லி எடுத்துரைத்தாள்மாதாவும்
அப்படியேநல்லதென்று அமர்ந்தார்அபிமன்னனுடன்
அபிமன்னனுக்கேதோழருமாய் அமர்ந்திருந்தபாடு

அஸ்தினபுரத்தின்-சிறப்பு

அஸ்தினபுரத்து அதிசயத்தைச்சொல்லுகின்றேன்
திரியோதனப்பெருமான் சிங்காதனச்சபையில்
பதியிழந்துபாண்டவர்கள் பெருங்காடுறைந்தாரென்று
நீதியையனுசரிக்கும் மன்னன்திரியோதனனும்
அஸ்தினபுரிநகரில் அழகுமணிமண்டபத்தில்
பத்தியொருகோடி புகலரியமண்டபத்தில்
நிரைகோடிகால்நிறுத்தி நிலாத்தினமுத்தணிந்து
வகைவகையாய்வச்சிரங்கள் வாகாகத்தானழுத்தி
தாமரைகை உயர்ந்தமுத்து தொங்கவிட்டு
தூணுக்குத்தூணு தண்டாவிளக்கேற்றி
தூணுக்குத்தூணு நலங்குமணிமண்டபத்தில்
மேல்க்கட்டிதூக்கி விப்ரிதமாய்சோதிமின்ன
ஆணிப்பவழ மணியணியாய்சோதிமின்ன
சங்கின்றமுத்து சாதிமுத்துசோதிமின்ன
பக்காகசோதிமின்ன பலதிசையுந்தான்தூக்கி
அல்லிமலர்முல்லைமலர் அழகுசிறுசண்பகம்
மல்லிகைமுல்லை மலருயிருவாட்சிகளும்

கொத்தலரிகுங்குமமும் குளிர்ந்தசுகந்தங்கள்
விஸ்தாரமான வெள்ளலரிப்பூவுகளும்
வெண்டாமரைமலரும் வேண்டியசெந்தாமரையும்
கண்கொள்ளாப்பூச்சரங்கள் கனகரத்தினமண்டபத்தில்
பூச்சரங்கள்கொண்டு புதிதாயலங்கரித்து
ஆச்சரியமாக அலங்காரப்பூச்சரங்கள்
வெள்ளித்தூணருகே விதமாய்மிகத்தூக்கி
சிங்கமும்சாளியும் சிறக்கவணிசேர்த்து
சிங்கத்தின்பேரில் சிறக்கவேதூணிருத்தி
ஆளியின்பேரில் அழகாகத்தூணிறுத்தி
நாலுகால்பீடம் நடுவாகஉண்டாக்கி
சிங்காதனமிட்டு சிங்கத்தைக்காலிறுத்தி
சங்கின்றமுத்தும் தாவடமும்பூஷணமும்
இங்கிதமாகவே இயல்பாகத்தூணிறுத்தி
நாகக்கொடியும் நவரத்தினசோதிமின்ன
தென்னமுடிமன்னன் திரியோதிரன்சகுனி
கர்னன்விதுரன் காங்காயன்தேத்தாசன்
குருக்கள்துரோணரும் கொற்றவருமன்னவரும்
கிருபன்கிருபாசாரி கீர்த்தியுள்ளவீஷ்மருடன்
அசுவத்தாமனுடனே ஆனதொருமன்னவரும்
திரியோதிரன்சபையில் சேர்க்கொலுவிருக்க
பதினெட்டுஅக்ரோணி படைமன்னர்தானிருக்க

சகுனி இலக்குணனுக்கு விவாகஞ்செய்யநினைத்துத்

துரியோதனனுக்குச் சொல்வது.

மாமன்சகுனி மருமகனைத்தான்பார்த்து
திரியோதிரனுடனே செப்பலுற்றானப்பொழுது
அங்கிருந்தமன்னவர்கள் அனைவோருந்தானறிய
தேசமைம்பத்தாறு திக்கிட்டுஆள்கிறையே
பாசமுடன்தேசம் பட்டமுமாளுநறையே
மிகச்சார்களெல்லவரும் வீடுகட்டிவாழ்வார்கள்
கைசார்ந்தால்கலியாணம் மகிழ்ச்சியாய்ச்செய்வார்கள்
அப்படியேஉம்முடைய அழகானலக்குணற்கு
கலியாணஞ்செய்யவே காலங்களிப்போது
நன்றாய்க்கலியாணம் ராஜமுடிமன்னர்மெச்ச
இப்போதேசெய்தால் இபலாயிருக்குமென்றான்
செப்பமுடன்தேசமெல்லாம் சிறப்பாயிருக்குமென்றான்
ஒப்பமுடன்சொல்லி உரைத்தான்சகுனியுமே
தேசந்தழகுமன்னன் திரியோதிரன்கேட்டு
ஆமென்றுசொல்லி அனைவருஞ்சொன்னார்கள்
மாமன்சொன்னபெண்பேச்சை மறவாமல்மன்னவனும்
பெண்ணெங்கேயென்று பேர்கேட்டானப்பொழுது

வண்ணமுடன்சகுனி வாசாயுரைக்கலுற்றான்
சொன்னான்சகுனி துவாரகாபுரிதனிலே
மாயன்பெருமாள் மகளாரைக்கொள்ளுமென்றான்
இலக்குணற்குஞ்சுந்தரிக்கும் இராசிபொருத்தமுண்டோ
எப்படிதானாலு மிசைந்துகொள்ளவேணுமென்றான்

(துரியோதனன்மகிழ்ந்து தாயாரைஉத்தரவுகேட்கல்.)

அப்படியேசெய்வோமென்று ஆனதிரியோதிரனும்
சிங்காதனத்தைவிட்டு திகழுக்குதித்திறங்கி
பல்லக்குமேலேறி படைமன்னர்சூழ்ந்துவர
மாமன்சகுனியுடன் வந்தானேதாய்வீட்டில்
தாயாரைச்சுற்றிவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டான்
வாரியெடுத்து மகனைமடியில்வைத்து
முகந்துடைத்துமுத்தமிட்டு முடிமேல்கையைவைத்து
வந்தவகையென்மகனே வரிசையுடன்சொல்லுமென்றாள்
தாயாராங்காந்தாரி தயவாகத்தான்கேட்டு
அண்ணன்சகுனியைத்தான் அன்பாகத்தானழைத்து
இருவரும்வந்தவகை என்னுடனேசொல்லுமென்றாள்
சகுனியுரைத்தானே தங்கையற்குமனங்குளிர
திரியோதிரனும் தெரியவேசொன்னானே
கட்டழகன்லக்குணற்கு கனமிகவேகலியாணம்
திட்டமுடன்செய்கைக்கு தெரியவேகேட்கவந்தோம்
என்னபுத்திதாயாரே எனக்கறியச்சொல்லுமென்றான்
பெண்ணுமிருக்குமம்மா பெருமாள்மகளாரும்
வண்ணமகள்சுந்தரியாள் மாயன்மகளாரும்
என்றுசொல்லியுங்களண்ணன் எனக்கறியச்சொன்னார்கள்
அந்தவிசேஷம் அதுகேட்டுஅம்மாளே
வந்தேனுன்வாய்விசேஷம்வாங்கியேபோகவந்தேன்
சந்தோஷமானபடி தாயாரேசொல்லுமென்றான்

தாயார்மகிழ்ந்து கலியாணஞ்செய்ய உத்திரவுகொடுத்தது.

தாயாருங்காந்தாரி சந்தோஷமாயுரைத்தாள்
மாயன்பெருமாள் மகளென்றுசொன்னயே
எனக்குமெத்தசந்தோஷம் என்மகனேஆச்சுதடா
எனக்குமெத்தசம்பந்தி ஒருவரில்லைஉலகமதில்
பெண்ணுங்கிடையாதோ பெருமாள்மெத்தபொன்கேட்பார்
கேட்டபொன்னைநீகொடுத்து கெட்டிபண்ணிகொள்ளுமென்றாள்
போவென்றனுப்பி புகழ்ந்துவிடைகொடுத்தாள்

திரியோதிரன் தன்தகப்பனிடம்வந்துகேட்டது

வந்தான்திரியோதிரன் மன்னவர்கள்தங்களுடன்
கர்னன்விதுரன் காங்கையன்தன்னுடனே
மன்னர்குருக்களையும் மற்றுமுள்ளமங்கையரும்
தங்களுடன்கூடத் தகப்பனண்டைதான்போனான்

தகப்பனைசுந்திவந்து சாஷ்டாங்கதெண்டனிட்டான்
அண்டையிலேதானழைத்து அப்பாமகனேயென்று
மற்றுமுள்ளமன்னவரைவகையாயிருங்களென்று
இத்தனைபேரும் என்மகனும்எங்குவந்தீர்
வந்தவகைஎன்னுடனே வரிசையுடன்சொல்லுமென்றான்
தென்னமுடிமன்னவன் திரியோதிரனுரைப்பான்
லக்குணர்க்குநல்முகூர்த்தம் நான்செய்யவேண்டுமென்று
மாயன்பெருமாள் மகளானசுந்தரியை.
நேயமுடன்கொள்வமென்று நிதானமிட்டேனிப்பொழுது
உம்முடையபுத்தி உயர்ந்தபுத்திநான்கேட்டு
சம்மதித்தால்போகவென்று தகப்பனைவந்தேநான்

(திருதராட்டிரன் வேண்டாமென்று தடுத்தது.)

தகப்பன்தயிலாடன் தான்கேட்டுஅவ்விசேஷம்
சிந்தைகலங்கி சிவசிவாவென்றுசொல்லி
இந்தவிசேஷம் எனக்குசரிபோகாது
சுந்தரிக்கும்பீமருக்கும் சொன்னார்சபதங்கள்
சுபத்திரைக்கும்லட்சுமிக்கும் முன்னேசபதமுண்டு
வில்லங்கமானபெண்ணைக் கொள்ளவேபோகாது
கொள்ளக்குடிகேடு குலத்துக்குஆகாது
கள்ளப்பெருமாள் கபடாக்குடிகெடுப்பான்
பெருமாள்முனக்குமுன்னே பொல்லாதசம்மந்தி
ஆகாதுகாணும் அவர்வீட்டுப்பெண்நமக்கு
பின்னையொருவீட்டில் பெண்ணுங்கிடையாதோ
போங்களென்றுசொல்லி போகவிடைகொடுத்தான்

திரியோதிரன் துவாரகைக்குப் புறப்பட்டது

அந்தவிசேஷம் அதுகேட்டுமன்னவனும்
கோபித்துக்கண்சிவந்து கொள்ளிநெருப்பதுபோல்
தாவித்துப்பூஷணங்கள் சாஞ்சமாய்தானதிர
தரணியிலேதான்விழுந்து தார்வேந்தன்கூறுவான்
குருடனுடபேச்சு நடக்குமோகொற்றவனே
தகப்பனென்றுசொல்லவந்தால் தடுத்துஅவன்சொன்னதுவும்
வகையுடனேசொல்லாமல் மாராட்டஞ்சொன்னானே
கண்தெரியாதான்சொற்கேட்டு கலியாணம்பண்ணாமல்
பின்வாங்கப்பேரோமோ பெரியவரோவாருங்கள்
என்றுசொல்லிமன்னவனும் இருந்தவர்கள்தன்னுடனே
வந்தாரரண்மனையில்மகாபேரிபோடுமென்றான்
பட்டணத்திலுள்ள படைமன்னரத்தனையும்
இட்டான்பயணம் இடும்பன்திரியோதிரனும்
துவாரகாபுரியென்று சொல்லிபயணமிட்டான்
அடித்தார்பேரிகையை ஐந்துலட்சங்கிங்கிலியர்
பிடித்தார்கள்பூரிகையை பிரியமற்றுமூன்றுலட்சம்

டமாரங்கள்நாலுலட்சம் ராயகிடி ஆறுலட்சம்
செவ்வானம்போல சூழ்ந்ததொருஆனைலட்சம்
கருமலைப்போல கருத்ததொருஆனைலட்சம்
முத்துபோலானை முழுவெள்ளைமுன்றுலட்சம்
பவழநிறம்போல்குதிரை பத்துலட்சம்பயணமென்றான்
பல்லக்குகாரர் படைமன்னராஜாக்கள்
கொல்லர்களெல்லோரும் கூடப்பயணமென்றார்
வீராதிவீரர்களும் வில்பிடிக்குமன்னர்களும்
ஆறுலட்சம்ராசாக்கள் அப்போபயணமென்றார்
துவாரகாபுரிதனிலே சுந்தரியைத்தான்கேட்க
பயணம்புறப்பட்டார் படைமன்னராசாக்கள்
திரியோதிரனுடனே சேரப்பிறந்தார்கள்
திரியோதிரனும் திரள்தம்பிமாருடனே
ஆயுதசேவகர்கள் அம்ளியுடனப்பொழுது
தோணியுங்காலாளும்திரள்கோடிமன்னவரும்
தண்டிகைக்காரரும் தார்வேந்தராசாக்கள்
ஒட்டையின்மேலேறி ஒருகோடிராசாக்கள்
இட்டசட்டைவாங்காத இடிமன்னர்தான்கோடி
போட்டசட்டைவாங்காத போர்மன்னர்தான்கோடி
அஸ்தினபுரத்திலுள்ள ஆனதுறைமன்னரெல்லாம்
பரிச்சிதமாயெல்லோரும் பயணம்புறப்பட்டார்
முப்பத்திரண்டுவகை மேளங்கள்தான்முழங்க
பேரிகைகொட்ட பொய்காளையூதிவர
பூரிகைகோடிலட்சம் பூமியதிர்ந்துவிழ
பண்ணிபடமாரங்கள் பத்துலட்சந்தான்முழங்க
வாரணமாறுலட்சம் விருதுமேளந்தான்முழங்க
திட்டமுடனுகசுறம் திறள்கோடிதான்முழங்க
மத்தளமிக்கைகளும் வாய்வீணைதாளமெல்லாம்
மெத்தமுழங்கிவர மெல்லியர்களாடிவர
சித்தமகிழ்ந்து திரியோதிரன்பார்க்க
வந்துதேபாளையங்கள் மட்டாறுதன்னருகே
இறங்கிற்றுபாளையங்கள் எங்குங்கிடுகிடென்ன
பூமிநடுங்கவெங்கும் பூலோகந்தானதிற
அண்டங்கிடுகிடென்ன ஆகாயந்தானதிர
அண்டமலைகளெல்லாந் தூளாகத்தான்பறக்க
கண்டபடைமன்னவர்கள் களைபட்டுத்தான்விழவே
துவாரகைதானதிர தொடர்ந்துதேபாளையங்கள்
தென்கடல்பொங்கி திரண்டுவருவதுபோல்
நடந்துதேபாளையங்கள்நாலுதிக்குந்தானதிர
பெண்கேட்கவந்தானே பேருனமன்னவனும்
ஆயன்பெருமாள் அரண்மனைக்கருகில்வந்து

திரியோதிரன்கூட்டம் சேனைவருகுதென்று
அறிந்துகொள்ளமாயனுக்கு ஆள்கள்வந்துசொன்னார்கள்
சொன்னவுடனே தீவிரமாய்த்தானெழுந்து
என்னஅதுவனிங்கே இவர்கள்வரக்காரியமேன்

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி ஆற்றில்வெள்ளம்பெருக

கங்கையைஅழைத்தது.

என்றுவிசாரமிட்டு எம்பெருமாளப்போது
பேதித்துஞானத்தை பெருமாளுந்தான்பார்த்தார்
பெண்கேட்கவாருனும் பொல்லாதபட்டிமகன்
தங்கையென்றுகங்கைதனை தானழைத்தார்அப்பொழுது
மாயவருந்தானினைக்க வந்தாளேகங்கையவள்
கங்காபவனிவந்து கிருஷ்ணரையுந்தான்பணிந்து
அழைத்தவகையென்ன அண்ணாவேசொல்லுமென்றாள்
மாயன்பெருமாளும் மறுவார்த்தைகூறுவாரும்
பொல்லாததிரியோதிரன் பெண்கேட்கவாருனும்
சேதமானசீமை இல்லைறகள்செய்வானேன்
ஆகாததுன்மார்க்கன் அவனிங்கேவந்தாக்கால்
நம்பவும்போகாது நானவனைநாயகியே
வம்பன்திரியோதிரனை வரச்சொல்லப்போகாது
தாயேநீகங்காளே தண்ணீராய்ஆற்றிலேதான்
பாலாறுதண்ணீர்வர பார்க்கவேணுந்தங்கையரே
பாராய்நீபைங்கிளியே படைமன்னர்வாராமல்
தண்ணீரைக்கண்டு தடையாகநிற்கவேண்டும்
வந்தேறவொட்டாமல் மாயவருஞ்சொன்னாரே

கங்கையானவள் ஆற்றில் பெருவெள்ளமாய்வந்தது.

நல்லது அண்ணாவேநன்றாய்வருகிறேன்யான்
மேகம்பரவியப்போ மின்னலிடிமுழங்க
மழைகள்பொழியவே வருகுதுஆற்றுவெள்ளம்
வருகுதுஆற்றுவெள்ளம் மரங்கள்மலைபிடுங்கி
இருகரையுந்தான்புரண்டு இரைந்துவெள்ளந்தான்வருது
வருகுதுதண்ணீரது மானமிதுபூமியொன்றாய்
ஆற்றங்கரையி லிறங்கிற்றுபாளையங்கள்
தண்ணீரைக்கண்டு தலைவாறுகெட்டுநொந்து
வண்ணவண்ணக்கூடாரம் வகையுடனேபோட்டார்கள்
தென்னமுடிமன்னன் திரியோதிரன்பார்த்து
என்னசெய்வோமென்று ஏங்கிமனந்தளர்ந்து
கூடாரம்போடுமென்றுகோபமுடனிருந்தான்

திரியோதிரன் துவாரகைக்கு ஆளனுப்பினது.

மந்திரிகாருமன்னவனை வாய்மொழிகேட்டானே
அக்கரைதாண்டவேதான் ஆளனுப்பவேணுமென்றான்

படகுமேல்மன்னவரை பாங்குடனேயேற்றிவிட்டு
அறிவுடனேற்றிவிட்டான் அம்மொழிகேட்டுவர
போனார்துவாரகா புரியந்தபட்டணத்தே
மாயனரண்மனைக்கு மன்னவரும்போயிருந்தார்
சீராணமாயன் சிங்காதனத்துமுன்னே
தெண்டனிட்டுமன்னவர்கள் சொகநின்றார்கள்
வந்தவரைத்தான்பார்த்து மாயனெடுத்துரைப்பார்
வந்தசெய்திசொல்லுமென்று மாயவருந்தான்கேட்டு
சொன்னார்கள்மந்திரிகள் சுவாமியைத்தெண்டனிட்டு
பெண்கேட்கவந்தோமென்று பெருமாட்குச்சொன்னார்கள்
திரியோதிரனுமெந்த சேனைபரிசனமும்
வருகிறார்நம்முடைய மகளாரைக்கேட்கவென்று
லக்குணற்கும்சுந்தரிக்கும் லட்சணங்கள்தான்பார்த்து
சகுனங்கள்தான்பார்த்து வந்தானே திரியோதிரன்
ஆறுதண்ணீர்வந்ததினால் அங்கேயிறக்கினார்கள்
ஆண்டவனேபெண்விசேஷம் ஆபினைசொல்லுமென்றார்
மாயன்பெருமானும் மறுவார்த்தைகூறுவார்
பெண்தானேறுமென்றுசொல்லிப் பெருமானுந்தான்கூறி
பெண்ணுக்குவந்தவர்கள் பின்னடந்துபோகாமல்
நான்கேட்டபொன்னை நமக்குக்கொடுத்தாக்கால்
கோபாலபெட்டி குறையாமல்பொன்கொடுத்தால்
சேர்வாகசுந்தரியை திராணமிட்டுநான்வாறேன்
என்றுசொல்லிமாயவரும் எடுத்துரைத்தப்பொழுது

பெருமான்சொன்னதைமந்திரிகள்திரியோதிரனுக்குச்சொன்னது

அந்தவிசேஷம் அதுகேட்டமந்திரிகள்
நல்லதென்றுதெண்டனிட்டு நடந்தார்களப்பொழுது
ஆறுதனைக்கடந்து அக்கரைபோயினார்கள்
திரியோதிரனுடனே செய்தியெல்லாஞ்சொன்னார்கள்
நல்லதென்றுசொல்லி நகைத்தான்திரியோதிரன்
பொக்கிஷக்காரரை போர்மன்னனழைத்து
அன்றிறைபுரத்துக்கு அதிவேகமாய்நடந்து
சொக்கக்களஞ்சியத்தை நோக்கமுடன்தான்திறந்து
எழுலட்சம்ஒட்டையின்மேல் ஏற்றியந்தபொன்னையெல்லாம்
இந்துலட்சம்யானையின்மேல் ஆபரணமேற்றுமென்றார்
பெண்ணுக்குஉண்டான பூஷணங்களுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறையில்லாமல் ஏற்றென்றுசொன்னமே
அப்படியேதான்போய்அரண்மனைக்குட்புகுந்தார்
பொக்கிஷவாசல் புண்ணியர்கள்தான்திறந்து
ஒட்டகம்யானை ஒன்றாய்நிறைந்தது
வந்துபொதிபிடித்தார் மகாராசன்பொன்னுகளை

வெறுமென்றபூசனைக்கு வெகுவாய்போதித்தார்
எத்திவந்துவிட்டார்கள் இங்கென்பயணியத்தில்
கண்டான்திரியோதிரன் களத்தியத்துப்போக்கையெல்லாம்
கொண்டாடிக்கொண்டு மெத்தகுதுங்கிநைத்து
அந்தவிபரமெல்லாம் அறிந்துபெருமாளும்
புத்திகெட்டுதான்திரியன் பெண்கேட்கவாறனும்
முன்னாலேதான்கொள்ளவந்து முனைகுலைந்துபோறானே
அருச்சுனன்தான்பார்த்து ஆகாயம்போறானே
பெண்ணைகொடுத்துவிட்டு பேய்போல்விழித்தேனே
அருச்சுனன்தான்பரித்தான் ஆண்மையுள்ளமைந்தனென்று
அருச்சுனன்மைந்தன் அபிமன்னனையும்பாராமல்
என்னையுந்தன்மனதி லீடாகப்பாராமல்
தன்னுடையதத்துவமுந் தான்படைத்தஆண்மைகளும்
முன்பின்னுமெண்ணாமல் முனைகுலைந்துபாராமல்
பின்னேவருகிற பிழைகளறியாமல்
வந்தானேபெண்கொள்ள மடையனுடபுத்திரனும்
நல்லதுநல்லதென்று நகைத்தந்தமாயவரும்
பணத்தில்வலுமையைத்தான் பகராக்கியிப்பொழுது
எண்ணிமனதிலே எம்பெருமான்தானப்போ
ஆற்றினீர்சுற்றிவர ஆயரவர்தானினைந்தார்
மாயமாய்ப்போக வரவழைத்தார்செங்கைதனை
அண்ணனழைக்க அறிந்துகங்கைதானடங்க
மாளவுகாலளவாய் வருந்தண்ணீர்தான்பார்த்து
திரியோதிரப்பெருமாள் சேனையெல்லாம்அப்பொழுது
நாளைபயணமென்று நகபத்துஅடியுமென்றான்
தேரும்ரதமும் திரளானஆனுவரும்
ஆறுகடந்துஅப்போ அக்கரையில்வந்தார்கள்
மாயனுடபட்டணத்தில் வந்துதேபாளையங்கள்
ஆயனுடபட்டணத்தில் அருகாகதண்டிறங்கி
திரியோதிரனும் திரியோதிரனுடனே
கர்ணன்சகுனி கணதுரோணர்தன்னுடனே
பெருமாளரண்மனைக்கு பேணிநடந்தார்கள்
ஆயன்பெருமாள் அரண்மனையுட்புகுந்தார்
மன்னன்திரியோதிரனும் மாயவர்க்குதெண்டனிட்டு
ஆயனெழுந்திருந்து ஐயர்குருக்களைத்தான்
ஆசீர்வாதமென்று அவரவர்க்குச்சொன்னாரே
இருக்கச்செலவு கொடுத்தாரெம்பெருமாள்
திரியோதிரனுக்குச் சிங்காதனமுமிட்டார்
குருக்கள்மார்தங்களுக்கு கூடசிங்காதனங்கள்
இருக்கவேயிட்டு யிருமென்றாரப்பொழுது

வெளியேபுறப்பட்டு வீதியிலேபோகையிலே
கடைகள்பெருந்தெருவே கன்னியருமப்பொழுது
பட்டணத்திலுண்டான பரிசனங்களத்தனையும்
காதிமுகநோக்கி தனித்தனியேகேட்பார்கள்
சுந்தரிக்குக்கலியாணம் கூடிற்றோதோகையரே
இன்றெட்டாநாளோவென்று கேட்டார்களெல்லோரும்

காதிசுந்தரிக்குச் சொல்வது,

அடித்துப்பிரண்டு அழுதாடநடந்தோடி
வந்தவழிதிருப்பி வாராளேசெங்கமலம்
கண்டாளேசுந்தரியும் காதலியாள்வாறதுக்கம்
என்னடியம்மாசெங்கழுனி என்னகுறைஉந்தனுக்கு
செலவுசொன்னபோனிடத்தில் செட்டியுன்னைவைதானோ
சாக்குசொன்னபோனிடத்தில் சண்டைமெத்தவுண்டாச்சோ
பின்னையொருவர் பிழைகள்மெத்தசொன்னாரோ
கிட்டிபடித்தாரோ நிம்புமெத்தசெய்தாரோ
பஞ்சவர்க்குத்தாழ்வு பாக்கியரேவந்ததுண்டோ
மாதுதுனிளபணைதக்கி மனஸ்தாபம்வந்ததுண்டோ
அம்மான்மார்வார்த்தைக்கு அதிசயங்களுண்டோதான்
அத்தைதனிளபணைக்கு ஆயாசம்வந்ததுண்டோ
மைத்துனனார்தன்னுடையவார்த்தைகள்தானுமுண்டோ
என்னடிகாதியரே எனக்கறியச்சொல்லுமென்றாள்
செங்கமலக்காதி சொல்லுவாள்சுந்தரிக்கு
தென்னன்முடிவேந்தன் திரியோதிரன்பாவி
உன்னைமணம்புரிய உடன்படிக்கைகேட்டதும்
மன்னன்பெருமாள் வரச்சொல்லிசொன்னதுவும்
பரியங்கனைபேசிபணம்வாங்கிக்கொண்டதுவும்
சரியாகச்சம்மந்தத் தாம்பூலம்வாங்கினதும்
சம்மதித்தேஉன்தகப்பன் தனம்வாங்கிக்கொண்டதுவும
கோபாலப்பெட்டியிலே கொட்டியளந்ததுவும்
இன்றைக்குப்பட்டாளுள் இசைந்தமுகூர்த்தமென்று
பெண்கொள்ளவாரோமென்று போனான்திரியோதிரன்
பாரதமுக்குமிட்டான் பட்டணங்களுள்ளதெல்லாம்
இந்தவிசேஷமெல்லாம் கேட்டல்லோவென்தாயே
உந்தனுடன்சொல்ல ஓடிவந்தேன்சுந்தரியே
என்றவளுஞ்சொல்லி யிருந்தாளேகாதியரும

பின்னுமேமாயன் பிரியமுடன்சொல்லலுற்றான்
அல்லகாண்சுந்தரியே அழகுமயிலாளே
திரியோதனனுக்கு திவ்வியங்கள்மெத்தவுண்டு
இராச்சியங்களெல்லாம் நாகமுடியோனாம்
ஒருகுடைக்கீழாக உலகமெல்லாம்ஆளுகிறான்
ஆளுந்திரியோதனன் அவன்மகன்லக்குணற்கு
பெருமையுள்ளமன்னன் பெலத்தாற்பெரியவன்காண்
உன்னழகுக்கேற்ற ஒளிவுள்ளலக்குணந்தான்
உன்-அத்தைமகனென்றால் அழகுகெட்டவாளபிமன்
மொட்டைதலையன் முட்டிக்கால்தட்டியவன்
நாடுதனிலேபிச்சை நலமாஎடுக்கிறானே
என்றுபெருமாள் எடுத்துரைத்தாரிவ்வார்த்தை
மாயன்மகள்சுந்தரியாள் மனஞ்சலித்துதான்கேட்டு
திரியோதனன்பணமோ தீரமாய்ப்பேசுகிறாய்
ஆட்டிடையாகள்ளா அசடர்குடிகேடா
ஒருவன்பெண்ணையொருவன் இச்சித்தகதைகேளாய்
வாத்தியார்கதைபோல வருமோடாயிப்பொழுது
என்றுதான்சுந்தரியாள் இயலாகக்கூறலுற்றாள்

இதுவும்உவமானமாகச்சொல்லிய உபாத்தியாயர்கதை.

அப்போதேகேட்டு ஆயன்மனமகிழ்ந்து
வாத்தியார் தன்கதையை வகைவகையாய்ச்சொல்லுமென்றார்
அப்போதேசுந்தரியும் அடைவாகச்சொல்லலுற்றாள்
ஆயனேஉன்னைப்போல் அறிவுகெட்டமன்னவனும்
இராச்சியத்தையாண்டு நாடொருமைசெய்கையிலே
அவனுக்கொருமகள் அதிகசந்தோஷமகள்
அந்தநல்லபெண்ணை அழகுள்ளபூங்கொடியை
ஐந்துவயதில் அறிவறியவேணுமென்று
வைகுந்தனென்னும் வாத்தியாரப்பொழுது
வாத்தியார்பள்ளியிலே மகளைப்படிக்கவைத்தார்
ஐந்துவயதில் அறியுமுதலாக
ஆத்திச்சுவடி அறிவுள்ளமுந்திலக்கம்
கல்வியொழுக்கம் கலந்ததொருவேழமுகம்
ஒன்பதாம்வயதில் உயர்ந்ததோரெண்சுவடி
பத்துவயதிலே பாரச்சுவடியான
நிகண்டுதிவாகரமும் நிகரானஇலக்கணமும்
காரிகையுரிச்சொல்க கனல்கெடிவெண்பாவுடனே
இத்தனைதானபடித்து இயல்பாவரும்பொழுது
ஒருநாட்பொழுதிலே உயர்ந்தபள்ளிக்கூடந்தனில்
பொழுதுபோருமுன்னே பிள்ளைகளையனுப்பிவிட்டு
வைகுந்தனென்ற வாத்தியாரப்பொழுது
மன்னன்மகளை வகையாகத்தானிருத்தி

மாயன்பெருமானே மன்னவனேகேளுமினி
கற்றாழைமேலே கல்லுவண்டிவந்தாக்கால்
கல்லுக்குச்சேதமோ கற்றாழைக்குச்சேதமோ
கல்லுவண்டிகொக்குமையா காண்டபன்பெற்றபிள்ளை
கற்றாழைகொக்குமையா கண்ணிலான்பெற்றபிள்ளை
கொக்குத்திரளிலே இராஜாளிபூந்தாப்போல்
கொக்குக்குச்சேதமுண்டோ குருடன்பெற்றதன்மகனும்
இராசாளிக்கொக்குமடா நல்லந்தைதன்மகனும்
அவர்களுடையசலம் அறிந்துமிகக்கண்டறிந்து
பஞ்சவர்கள்சாதிவகை பாவியறியாயோடா
ஐவருடவீரியமும் ஆண்மையறியாயோடா
முன்னேயுந்தங்கையறை மொய்க்குழலாளத்தையறை
திரியோதனனும்வந்து தீவிரமாய்க்கொள்ளுகைக்கு
பலராமரிடத்தில்வந்து பரியமதுதான்கொடுத்து
மண்மேலேதானிருந்து மங்கிலியந்தானெடுக்க
அப்போது அருச்சுனரும் ஆகாசமாகவந்து
சந்நியாசிவேடங்கொண்டு தார்விஜயனப்போது
தாலியைத்தான்பிடுங்கி தாலிகட்டிஅப்போது
அருச்சுனனார்தேவியென்று அறியவேதாலிகட்டி
வெட்கஅடித்தாரே விசையனுமொன்மகன்
அப்படிக்கொத்தவனை அறிந்திருந்துஎன்தகப்பன்
பஞ்சையாய்நீயும் பணத்துக்குஆசித்து
உன்னுடையசாதிபோலே உத்தமனேபார்த்தாயே
மட்டப்புத்திபோலே நினைத்தாயோமாட்டிடையா
பெண்சாதிதானிழந்து போனாயேமுன்பிறப்பில்
அரக்கனும்தேவியைதான் அழைத்தோடிப்போனானே
சீதையுந்தேவியளை சிறையிலேவைத்தானே
ரோஷமுனக்குமுண்டோ லோகமளந்தவனே
இப்படிசொல்லியல்லோ ஏகினாள்சுந்தரியும்
இன்பமுடன்கேட்டு இருதயத்தில்தானகைத்து
வாயைத்திறவாமல் மறுவார்த்தைபேசாமல்
தலையைக்குனிந்துகொண்டுசுவாமியிருந்துவிட்டார்

### சுந்தரிதன் தகப்பனிடத்திற் சபதமிட்டது.

அப்போதுசுந்தரியும் ஐயர்மனதரிய
அஸ்தினாபுரத்தையெல்லாம் அடியோடேதானிடித்து
பரிசிதமாய்த்தானிடித்து பரித்திவிளைத்திடுவேன்
துவாரகாபுரியெல்லாஞ்சுட்டுக்கரியாக்கி
திரியோதனன்கூட்ட சேனைகளுள்ளதெல்லாம்
கரியாக்கிசுட்டு கடலிலேபோட்டுவைப்பேன்
ஆகாசத்துக்கணை ஐந்துமுடிபிளைத்து

தாசிமகன்லக்குணர்க்கு தலைசாய்க்கத் திடமுண்டோ
சுண்டுவிரல்பிடித்து சுத்திவரத்தெம்புண்டோ
ஒருநாளிலேயென்றிருந்தேன் உலகத்திலுள்ளபடி
இருநாளிலேயன்றிருக்க எந்தன்விதிவசமோ
சாவேன்கெடுவேன் சமுத்திரத்திற்போய்விழுவேன்
சாண்வயிறுபஞ்சமோ என்னுயிரைமாய்ப்பதற்கு
நஞ்சுமலரியும் கிடையாதோ நாராச்சியத்தில்
பொன்னுங்கலிசெருத்துப்பொருத்தக்கழுத்திலிட்டு
பூப்போலேயென்னுயிரை போகக்கறிவீரோ
ஆளாப்புலையனுக்கு ஆசைதான்சொன்னீர்களோ
வெட்கந்தானில்லையோ மெல்லியலேதாயாரே
திக்கற்றவுங்களுக்கு தெய்வந்துணையாமோ
வயிற்றைக்கிழித்துநான் வாளைவாங்கிவைப்பேன்
இருவரையுங்கொன்று எமலோகமோட்டிடுவேன்
அவனையுங்கொன்று அனுப்புவேன்ஆகாசம்
என்றுசொல்லிசுந்தரியும் இட்டாள்சபதமெல்லாம்
மகள்முகத்தைப்பார்த்தாளே மங்கையலமேலும்
என்மகளேசுந்தரியே இந்தவகைநானறியேன்
கலியாணப்பேச்சுகளைகாதிலேயுங்கேட்டறியேன்
திரியோதிரன்சேனை திரள்வந்துதென்றார்கள்
வந்ததும்நான்கேட்டேன் மறுவார்த்தைநானறியேன்
பெண்வந்துகேட்ட பேச்சுகள்நானறியேன்
என்றுசொல்லிசுந்தரிக்கு எடுத்துரைத்தாலட்சுமியும்
நல்லதுநல்லதென்று நடந்தாளேசுந்தரியும்
தாதியுடன்கூட தன்மனைக்குவந்துவிட்டாள்
மாணிக்கத்தண்டிகேறி வந்தாளேசுந்தரியும்
அரண்மனைக்குவந்து ஆசனத்தின்மீதிருந்து
ஐந்துபேர்தாதிகளை அண்டையிலேதானழைத்து
ஆலோசனைசெய்து ஆங்காரக்கோபமுடன்
அபிமன்னராசனுக்கு ஆளனுப்பவேணுமென்று
ஓலையெழுதவென்று உத்தரவுசொன்னாளே
தாதிகளுமப்போது சம்மதித்துக்கொண்டார்கள்

### சுந்தரி அபிமன்னனுக்கு ஓலையெழுதுவது.

ஓலையெழுதவென்று உத்தமியாள்சுந்தரியும்
வண்ணக்குருத்தோலை வாரியவளொப்பமிட்டு
ஈழப்பனையோலை இருபக்கங்காம்பரித்து
தாளிப்பனையோலை தலைப்பக்கங்காம்பரித்து
விநாயகனைபூசைபண்ணி விக்கனைத்தோத்தரித்து
சிவசிவாவென்று சிவனைத்தோத்தரித்து
வேலுமயிலுடையவேலவனைத்தோத்தரித்து
வந்தனைக்குமுன்னடவாய் வள்ளிமணவாளா

ஆயிரம்பெருந்திரியாய் அவன்தலையில்விளக்கேற்றி
மணைமேலேதானிருந்து மைத்துனரேயுன்கையால்
மங்கிலியங்கட்டி மகிழ்ந்திருப்பேனென்றுசொல்லி
சபதங்கள்தானுமிட்டுதாய்மனைக்குநான்போனேன்
சண்டைமெத்தநான்கொடுத்தேன் தாயாருடன்கூட
சத்தியங்கூறினாள் தாயாரறியேனென்று
பின்னையுமெத்தமெத்த பேசிசபதமிட்டேன்
சபதமறியாதே தயவாகமைத்துனரே
சிவசிவாமைத்துனரேசெய்தருளுமங்கிலியம்
வந்துநீரென்னையிப்போ மங்கிலியங்கட்டுமென்றாள்
பள்ளிக்கூடந்தனிலே இருந்துபந்தடித்தோமே
வள்ளிக்கொடிபோலே வளர்ந்திருந்தேனப்போது
பஞ்சைசிரிக்கியைப்போல் பத்தாவெநாணிருந்தேன்
கஞ்சைச்சிரிக்கியைப்போல் கூடத்திரிந்தேனே
கரிக்குச்சிபோலே கடிக்கித்திரிந்தேனே
அப்பவள்தானெண்ணுதே அபிமன்னராஜாவே
வளர்ந்தேன்சமைந்தேன் வடிவுமிகவானேன்
மயிரழகைக்கண்டாலே மயங்குவீர்மைத்துனரே
தொடையழகைக்கண்டால் கொத்தவனேநீதறியாய்
நெற்றியழகுகண்டால் நீபொறுக்காய்மைத்துனரே
மூக்கழகைக்கண்டால் மூர்ச்சையாய்நீவிழுவாய்
கண்ணழகைக்கண்டால் களைத்துவிடுவாய்மைத்துனரே
கண்புருவம்ரெண்டழகும் காமனார்வில்லதுபோல்
மேற்புருவம்இரண்டும் வேப்பிலைச்சாயலைப்போல்
சிவிமுடித்தகொண்டை சிறுத்தபழம்போல்
மன்னவரைத்தான்மயக்கும் மதிமுகத்தினதிசயமும்
வடிவானகாதிரண்டும் வள்ளிக்கொடியதுபோல்
கூறியமூக்கிரண்டும் குமிழம்பழமதுபோல்
வாயழகைக்கண்டால் மயங்குவாய்மைத்துனரே
பல்வரிசையாணிப் பதமுத்துபோலிருக்கும்
தோளழகுமைத்துனரே சொல்லுகிறேன்நீர்கேளும்
மூங்கிற்குருத்துபோல் முளைத்தபிறுதோளழகும்
மார்பழகைச்சொல்லுகிறேன் மைத்துனரேநீரறியும்
அகண்டமணிமார்பும் ஆபரணபூஷணமும்
திரண்டஸ்தனமிரண்டுமே செண்டானபந்ததுபோல்
ஒப்புடனேநானும் ஒளிவாயிருக்கிறேன்காண்
மட்டிடப்போகாது மைத்துனரேயென்னழகு
ஆலிலைபோலாக அமர்ந்தசிறுவயிறும்
இடையழகுசொல்ல எனக்குத்தெரியாது
சிங்கத்திடையென்று செப்புவார்தோழியர்கள்
நடையழகுமைத்துனரே நல்லஅன்னம்போலிருக்கும்

பூரித்தெழுந்திருந்துபுறப்பட்டான்வாளுருவி
வாளாலேவீசுதும்மலைமரங்கள்சாய்கிறதும்
தோளாலகுவெடுத்துதுறத்திவருகிறதும்
காற்றுக்கெதிராகக்காவலனார்வருகிறதும்
பார்த்தானேவாயுராஜன்பாலன்வருகிறதை
துரியோதனன்படையைச்சேரவடித்திடுவான்
நூற்றொருவர்தன்முடியைகொடியிலறுத்திடுவான்
பதினெட்டுஅக்குரோணிபடையும்பரிகளும்
கணப்பொழுதில்வெட்டிகயிலாசம்போக்கிடுவான்
அந்தமலைகாட்டில்அன்பானதோழரெல்லாம்
சிந்தைகலங்கிசெடிமறத்தைத்தான்பிடித்து
பந்துபோல்சுருண்டுபடுத்திருந்தாரக்காட்டில்
அப்போதுவாயுராஜன்அன்பாகஓலையைத்தான்
ஓலைச்சுருளெடுத்துஓட்டிவிட்டான்காற்றோடே
ஓலையைவிட்டபின்புஓடியேபோனானே

அபிமன்னன் ஓலையையெடுத்துக்கொண்டு போகுதல்.

அந்தச்சுருளோலைஅபிமன்னன்முன்னேவந்து
பந்துபோல்தானெழும்பிபக்கத்தில்விழுந்ததுகாண்
கண்டானேஓலையைத்தான்காண்டீபன்றன்மகனும்
கணையாழிமுத்திரையுங்கடைஓலைசுற்றதுவும்
மணமானசுந்தரிதான்வரவிட்டாள்ஓலையென்று
கணமாகத்தானெடுத்துகனிவாயால்முத்தமிட்டு
கோபித்துவாளுருவிகோபமுள்ளபாலனுமே
துணித்திடுவேனென்றுசொல்லித்துரத்தினான்பாட்டனையும்
பார்த்தானேநாலுதிக்கும்பாட்டனையுங்காணமல்
போய்விட்டானென்றுசொல்லிபூரித்தான்பாலனுமே
திரும்பிநடந்தானேதிக்குதிசைதானடங்க
தோழன்மார்தங்களுடன்சொல்லவேவேணுமென்று
தேடிப்புறப்பட்டுசேவகரைக்கண்டானே

அபிமன்னன் தோழருக்குச்சொல்லுதல்.

அந்தஅபிமன்னன்அனைவரையுந்தானெழுப்பி
சிந்தைதெளியவைத்துசிவனைத்தோத்தரித்து
காற்றிலகப்பட்டீர்களோகட்டழகாநம்பிகளே
வேற்றோலையாகவந்துவிழுந்ததடாயென்மேலே
ஓலையைக்கொண்டுநானுங்களையுந்தேடிவந்தேன்
தப்பிப்பிழைத்தீர்களோதடமாட்டமாகாமல்
காற்றடித்தபாட்டன்கடலிலேபோயொளித்தான்
ஓலையைப்போட்டுவிட்டுஓடினான்பாட்டன்
உங்களையான்பார்க்கவோடிவந்தேனுத்தமரே
அரண்மனைக்குப்போவோமென்றுஅழைத்தானேபாலனுமே
நல்லதென்றுசொல்லிநடந்தாரரண்மனைக்கு
அம்மாள்சுபத்திரையாள்ஆசாரமண்டபத்தில்

சிங்காதனத்திலே இருந்தாள்சுபத்திரையும்
மன்னவர்கள்பிள்ளைகளும்மாயன்மருமகனும்
அம்மாளைச்சுற்றிவந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
வாழ்த்திவிடைகொடுத்துமறுசங்கைகேட்டாளே

அபிமன்னன் தாயாருக்கு ஓலைகொடுப்பது.

அப்போதபிமருகும்அம்மாளைத்தான்பார்த்து
காற்றோடே நம்பிமார்கண்டெடுத்தாரிவ்வோலை
பார்த்தெனக்குச்சொல்லுமென்றுபாலகனுங்கைகொடுத்தான்
அந்தச்சுருள்வாங்கிஅம்மாளும்வைத்திருந்தாள்
பொழுதுபுகுந்ததுகாண்புதுநிலவுகாயுதப்போ
சலக்கங்களாடிசந்திசெய்தாள்முடித்து
சாப்பிட்டவரும்தம்பியார்தூங்கினபின்

சுபத்திரை ஓலைவாசிப்பது.

அம்மாளெழுந்திருந்து அரண்மனையைத்தான்மூடி
திருவகையங்காணுமல்லோலைச்சுருளெடுத்து
தூண்டாவிளக்குமுன்னேபார்த்தாள்சுபத்திரையும்
உருகிக்கரைந்தழுதாள உடம்பெல்லாம்புண்ணானாள்
அண்ணனைத்தானினைந்து அறைந்துகொண்டாள்மார்மேலே
கண்ணிலான்பேரனுக்குகலியாணம்வந்ததென்ன
பண்ணாடகன்கத்திரியும்பழுதுக்கப்பட்டாளே
என்னசெய்வேனென்றுஏங்கிமனத்தளர்ந்தாள்
நம்பியிக்கப்பேச்சிருந்தால்நரிப்பாரோபூமியிலே
அந்தச்சுருளோலைதன்னை அன்பாய்மறைவைத்தாள்
இந்தவிசேஷம்எடுத்துரைக்கப்போகாது
என்றுசுபத்திரையாள்இருந்தாள்மனதில்வைத்து

அபிமன்னன்சொல்வது.

பொழுதுவிடிந்தபின்புபோர்மன்னராசாக்கள்
எழுந்திருந்துமுகம்கழுவிஈஸ்வரனைதானினைந்து
திருநீறுபூசிசிவனைத்தோத்தரித்து
தம்பிஅபிமன்னன்சாப்பிட்டபிற்பாடு
வாளபிமன்னனுமே மாதாவைதெண்டனிட்டு
தாயேநான்தந்த சுருளோலைவாசகத்தை
நேயமுடன்சொல்லுமென்றுகேட்டானேபாலன்

சுபத்திரைசொல்வது.

தாயார்சுபத்திரையும்தம்பிமுகம்பார்த்து
யாருக்கோவந்ததோடா அவ்வோலை காற்றோடே
மாயமாய்வந்ததோடாமகனேயவ்வோலை
வாசித்துப்பார்த்தேனடாவகையொன்றுமில்லையப்பா
கிழித்தெரிந்துபோட்டேனென்றுசொன்னாள்சுபத்திரையும்
சொன்னவுடன்பாலன்துள்ளியெழுந்திருந்து
கோபித்தெழுந்திருந்துகொக்கரித்துபற்கடித்து

வாழ்த்திவிடைகொடுத்துபாலனையும்பத்திரமாய்
காத்திருங்களென்றுசொல்லிகடிகியுரைத்தானே

சுபத்திரை துவாரகாபுரம்வருவது

முப்பத்திரண்டுவகைமேளங்களுள்ளதெல்லாம்
தப்பாமல்கொஞ்சிவரசங்கிதந்தான்முழங்க
வாராள்சுபத்திரையும்மாயனுடபட்டணத்தே
காடுகடந்துகரியமலைதான்கடந்து
நாடுகடந்துநல்லமலைதான்கடந்து
இஞ்சிவனங்கடந்துஎலுமிச்சைதான்கடந்து
மஞ்சள்வனங்கடந்துமாதுளையினுட்புகுந்து
சிங்காரத்தோப்புகளும் தெருவும்பலகடந்து
அண்ணனார்மனைக்குவந்தாள்சுபத்திரையும்
ஆயன்பெருமாள்அவரிருக்குமண்டபத்தே
தண்டிகைவிட்டிறங்கிதங்காள்சுபத்திரையும்
தமையனுடன்கால்மேலேமாதுகன்னிதெண்டனிட்டாள்
தெண்டனிட்டதங்கையனைஸ்ரீராமர்தான்பார்த்து
வாருமம்மாள்தங்கையரேமகனுஞ்சுகமோதான்

சுபத்திரைசொல்வது

அண்ணனைத்தான்பார்த்து அரிவைசுபத்திரையும்
என்னவென்றுகேட்டாளேஏலங்குழலாளும்
கண்ணிலான்பேரனுக்கு கற்புடையசுந்தரியை
என்னென்றுநீர்கொடுக்கஇசைந்தீர்பெருமாளே
நம்முடையஜாதியிலேநடக்குமோஅண்ணாவே
கண்டவர்க்குநன்றாயிருக்குமோகர்த்தாவே
அண்டத்தில்வானவர்கள்ஏசாரோஅண்ணாவே
என்னையும்பார்க்காமலேக்குற்றப்போனீரோ
அண்ணனென்றுநானிருந்தேன்அநியாயஞ்செய்தீரோ
உம்முடனேநான்பிறந்துஉலகத்துக்கேச்சாச்சே
என்றுசொல்லிதான்புலம்பிஏலங்குழலாளும்
அடித்துப்புரண்டழுதாள்அண்ணார்கொலுமுகத்தில்

பெருமாள்சொல்வது.

அப்போதெழுந்திருந்துஆயன்பெருமாளும்
தங்கைசுபத்திரைக்குதணியவேகோபமெல்லாம்
இங்கிதமாகவேஎடுத்துரைப்பாரேந்திழைக்கு
என்னாலேவந்ததல்ல ஏலங்குழலாளே
மாமன்சகுனியுடவார்த்தையினால்வந்ததுதான்
துரியோதிரன்குடியைச்சேரக்கெடுக்கவென்று
நூற்றொருவர்தன்முடியைநொடியிலறுக்கவென்று
பார்த்திருக்கஅவன்சிரசுபாழாக்கவேணுமென்று
சகுனிகெடுத்தாண்டிதங்கையரேநீபோடி
பின்னுக்குத்தான்தெரியும்பேசாதேநீபோடி

அலமேலுமங்கைஅரண்மனைக்குப்போய்வாடி
என்றுசொல்லிஅப்போவந்திழைக்குச்சொன்னளே

சுபத்திரை இலட்சுமியை ஏசுகிறது

அந்தசுபத்திரையும்அரண்மனைக்கு உட்புகுந்து
அலமேலுமங்கையளைஅவள்முகத்தைத்தான்பார்த்து
சொன்னள்சுபத்திரையுந்துடுக்கானவார்த்தைகளை
மாட்டிடையன்தேவியடிமதிகெட்டுப்போனயோடி
ஆட்டிடையன்தேவியடிஅறிவழிந்துபோனயோடி
இடைக்குலத்திற்பிறந்தவர்க்கற்றுப்போனயோடி
கண்டார்களையாரோடிகலியுகத்தாரோசொரோடி
வெட்கமுமில்லையோடிவெசிமகளோ
இப்படியாய்ச்சொல்லிஏசினள்லட்சுமியை
கோபம்பிறந்துகாண்கோபாலன்தேவியற்கு

இலட்சுமியும் சுபத்திரையுஞ் சண்டையிடுகிறது.

அலமேலுமங்கையரும்அப்போளெழுந்திருந்து
ஏண்டிபெண்ணேபேசுகிறாய்இடையனுடைத்தப்பே
மாட்டிடையன்தங்கையேமதிகெட்டுப்போனயடி
ஆட்டிடையன்தங்கையே அறிவுகெட்டுவந்தாயோடி
பேச்சுமிஞ்சிப்பேசாதேபின்னிடந்துபோடியென்றள்
நாட்டினிலாய்ச்சொல்லுகிறேன்சாய்ப்பாகநீபோடி
பேசும்பெண்ணடிசொல்லவேதான்பூவைசுபத்திரையும்
அலமேலுமங்கையரும்அவள்மடியில்கைபோட்டாள்
இருவருமங்கேயிழுத்துமடிபிடித்து
ஒருவர்க்கொருவர்உக்கிரகோபமுடன்
முன்சொன்னசபதமெல்லாம்முடிக்கிறேன்வாடியென்று
சாட்சிபொண்டையிலேபோவோம்வாவென்றுசொல்லி
ஏசியவளை இழுத்தாளுடைகுலைய
அவளிழுக்கஇவளிழுக்கஅடிதடிகளாச்சுதங்கே
அடித்தாளே தாடையிலே அலமேலுமங்கையளை
இவளடிக்கஅவளடிக்கஇவளிழுக்கஅவளிழுக்க
அடிதடிகள்மிஞ்சுதுகாண்அகங்காரக்கோபமுடன்
கட்டிப்புரண்டுகட்டுருண்டுகாலுருள
சாதிகளெல்லாந்தலைமேலேகையைவைத்து
கெக்கிக்கிகளிட்டுக்கூக்குரலுந்தான்போட

சுந்தரிவிலக்குவது.

கேட்டாளேசுந்தரியுங்கிருபையுடனேடிவந்து
பார்த்தாளிருவரும்படுகிறதுன்பமெல்லாம்
ஓடிவந்துமெல்லிமுந்தாஒருத்திதலைமயிரை
மாமிதலைமயிரைவாங்கிவிட்டாள்சுந்தரியும்
தாயார்தலைமயிரைதனியேவாங்கிவிட்டாள்
மாதுசுபத்திரையைமருமகளுந்தான்பார்த்து
அத்தையரேஇப்பேச்சுஅம்மாளறிந்ததில்லை

நானறிந்துசண்டையிட்டுநாயகியேசொன்னேன்காண்
அப்போதறிந்தாள்காண்அலமேலுமங்கையரும்
அறியாதவள்பேரில்அடித்துவிழக்காரியமேன்
மாமியார்தன்னுடனேவகையாகச்சொன்னாளே

இருவரும்சாட்சிகேட்கவருவது.

சாட்சிபோண்டையிலேதாம்போவோம்வாருமென்று
அன்றுமுழுகினஅக்குளமுந்தான்றேடி-
கங்கைக்கரைமேலேகிளிமொழிமார்வந்துநின்று
சுபத்திரையுமப்பொழுதுசொல்லிஉரைத்தாளே
கங்கைமாதேவியரேகிருஷ்ணனுடற்பிறப்பே
தங்கையுரைக்கிறதைதயவாகநீர்கேட்டு
உண்மையாய்நீகேட்டுஉத்தமியேநீயுமப்போ
அலமேலுமங்கையரும்அறியவேநீயுமப்போ
சாட்சியுரையுமம்மாதயவாகவெங்களுக்கு
லட்சுமியும்நானுமப்போ நாலாநாள்தானும்வந்து
சூதகமாய்தலைமுழுகிதுய்யகரைவந்துநின்று
ஒருவர்க்கொருவர்உவந்துமன்மகிழ்ந்து
இந்தமுழுக்கோடேஇதுகெற்பமுண்டானால்
உன்வயிற்றிலாண்பிறந்துஎன்வயிற்றில்பெண்பிறந்தால்
உன்மகனுக்கென்மகளைஉத்தமியேதாரேனென்று
என்வயிற்றிலாண்பிறந்துஉன்வயற்றில்பெண்பிறந்தால்
என்மகனுக்குன்மகளைஈந்திடவேணுமென்று
இருவருஞ்சொல்லிஇசைந்துவைத்துக்கொண்டோமே
அப்படியேஎன்வயற்றில்ஆண்பிள்ளையுதித்தது
அவள்வயிற்றில்பெண்பிறந்துஅதுவுமவளர்ந்ததுகாண்
அன்றுசொன்னவார்த்தையெல்லாம்அதுவுமவள்மாற்றிவிட்டு
லக்குணர்க்குத்தான்கொடுக்கநேமயிட்டாராம்

கங்கை சாட்சிசொல்வது,

ஏதென்றுநான்கேட்டால்இல்லையென்றாள்லட்சுமியும்
நீங்கள்ளறிவீரென்றுநிண்ணயங்கள்பண்ணினதை
அப்போதேஉங்களையும்அறிந்திரென்றுசாட்சிவைத்தோம்
அதுகேட்கவந்தோமேஅவளறியநீருரையும்
என்றுசொல்லக்கங்கையரும்இதுமெய்தானென்றுசொல்லி
மெய்யென்றுசொல்லியப்போமேலாகப்பொங்கிற்று
குமளியிட்டுப்பொங்கிற்று குளக்கரையின்மேலாக
கண்டீரோலட்சுமியே கங்கையுடசாட்சிதன்னை

இலட்சுமி கங்கையின்சாட்சி பொய்யென்பது.

அப்போதலமேலும்அல்லவேசாட்சியென்று
மாமாங்கம்பொங்கும்வருஷமிதுமாதம்
அதனாலேயெனக்கும்அமர்ந்துமேபொங்கிவிடும்
அல்லவடிசாட்சியென்றே அலமேலுமங்கையரும்

சுபத்திரையும்அப்பொழுது சுந்தரியேலட்சுமியே
வாடியென்றனையழைத்தாள் ஆட்டிடையன்தன்னருகே
ஆட்டிடையன்அண்டையிலே அருகாகவந்துநின்று
அண்ணே நான்கோபாலா அன்றிருவர்நாங்கள்வந்து
சம்பந்தம்பேசியேதான் சாட்சிவைத்துப்போனோமே
அலமேலுமில்லையென்று ஆகடியம்பேசுகிறாள்
உண்டோதான்இல்லையோதான் உத்தமரேசொல்லுமென்றாள்

பெருமாளும் ஆகாயவாணியுஞ்சொல்வது

ஆமாண்டியென்பிறப்பே அசடிசுபத்திரையே
கொள்வேன்கொடுப்பேனென்று கூறாமலப்பொழுது
என்முன்னேசொன்னதுண்டு அநேகநாள்ஆச்சுது
ஆனாலிடைச்சியல்லோ அசந்துமதிகெட்டாளோ
சொன்னதுண்டுகேட்டதுண்டு சுபத்திரையேயென்றுசொன்னார்
ஆட்டிடையன்சொல்லுகையில் ஆகாயவாணியரும்
மெய்தான்காணென்று விளம்பினாள்மேலாக
கேட்டீரோலட்சுமியே கீர்த்தியுமிப்போது
என்றுசுபத்திரையா ளெடுத்துரைத்தாலட்சுமிக்கு

இலட்சுமிஇதுவும்பொய்யெனல்

இடையனார்சொல்லினது மீடல்லஎந்தனுக்கு
பெரியவயதிலே பினத்தினான்கோனாரும்
முன்பின்னுந்தோன்றாது முதிவயதுபெற்றதினால்
ஆகாயவாணியரும் அதுவுநானம்பேனடி
மேகமதிர்ந்ததினால் விளம்பினார்போலாச்சு
சாட்சியிதுவல்லவென்றே தானிடஞ்சாள்லட்சுமியும்
பின்னையும்சொல்லியப்போ பேசினாள்லட்சுமியும்
எந்தவரிசையுடன் என்பெண்ணைக்கேட்பாரோ
ஊருமில்லைபேருமில்லை உறங்கவிடமுமில்லை
நாடுமில்லைவீடுமில்லை நாட்டிலேயும்பாதியில்லை
காணியில்லைபூமியில்லை கானகத்துவேடருக்கு
என்பெண்ணைக்கேட்க இசையுமோவுந்தனுக்கு

இலட்சுமிக்கும் சுபத்திரைக்கும் சண்டையாகிறது.

என்றுசொல்லட்சுமியும் எட்டியேயப்பொழுது
மயிரைப்பிடித்திழுத்தாள் மங்கைசுபத்திரையும்
அலமேலுமங்கையும் அவள்மயிரைத்தான்பிடித்தாள்
அடித்தாளேசுபத்திரையும் அலமேலுமங்கையைத்தான்
அவளிழுக்கயிவளிழுக்க இடுப்பிலேதானுதைக்க
அடிதடிகள்மிஞ்சுதுகாண் ஆங்காரக்கோபமுடன்
வெய்யலிலேதான்பிரண்டு மேதினியில்தான்விழுந்தார்

சுந்தரி விலக்குவது.

மாயன்மகள்சுந்தரியும் மறுபடியுமோடிவந்து
பார்த்தாளேயத்தையரின் பரிதாபந்தாளாமல்
ஓடிவந்துமேல்விழுந்து ஒருத்திதலைமயிரை

மாமிதலைமயிரை வாங்கிவிட்டாள்சுந்தரியும்
தாயாரைத்தான்விலக்கித் தள்ளிவிட்டாளப்புறத்தே
என்னமனதுகுறை யென்றுமேகேட்கலுற்றாள்
நானிங்குதானிருக்க நடக்குமோசண்டைகளும்
என்னம்மாவுங்களுக்கு இத்தனைகோபமென்ன

சுந்தரிசொல்வது.

ஆகாப்புலையன் அழிவான்கழுசிறையன்
தேசத்தாசன் திரியோதிரன்பாவி
மோசம்பண்ணுஞ்சகுனி மூதேவிசண்டாளன்
சதிக்குச்சமர்த்தன் சகுனிபம்பாவி
ஆசரித்துக்கொள்ளவே நினைத்தான் அரும்பாவி
உங்களுக்குவந்ததென்ன ஒருவர்க்கொருவர்சண்டை
சமிச்சுமனங்கொள்ளென்று சாஷ்டாங்கந்தெண்டனிட
மாமிசுபத்திரையை மருமகளுந்தான்பார்த்து
அத்தையரேயிப்பேச்சு அம்மாளறிந்ததில்லை
கலியாணப்பேச்சுகளைக் காதாலேகேட்டதில்லை
அறியாதவள்மேலே அருஞ்சண்டையேதுக்கு
மாமியார்தன்னுடனே வகையாகச்சொன்னாளே
கோபங்குறையாதென்று கூறினாள்சுந்தரியும்
என்-மைத்துனனாச்சீக்கிரமாய் வரவிருக்காண் அத்தையரே
தலைமுழுகிபூசைசெய்து சாப்பிடவேவாருங்காண்

சுபத்திரைசொல்வது.

சாப்பிட்டேன்மருகளே தயவுமறவாதே
போய்வாரேனென்று புறப்பட்டாள்பூவையரும்
தாதிகளைத்தானழைத்து தண்டிகைபிடியுமென்றாள்
மருமகளுமோடிவந்து மாமிக்குத்தெண்டனிட்டு
பாலமுதுகொள்ளாமல் பட்டினியாய்போவாரோ
என்றனை அத்தையரே இருந்தமுதுகொள்ளுமென்றாள்
இத்தனைசண்டையிலே அமுதுகொண்டாலேசாரோ
அமுதுஇறங்குமோடி அன்னப்பசுங்கிளியே
இருவென்றேசொல்லி யேறினாள்தண்டிகைமேல்

சுந்தரிசொல்வது.

சுந்தரியுமோடிவந்து சொன்னாளொருவிசேஷம்
என்-மைத்துனனைநாளையிங்கே வரச்சொல்லும்அத்தையரே
அவர்-வாராமல்தானிருந்தால் மடிந்திடுவேன்மாமியரே
அக்கினியில்நான்விழுந்து அபகீர்த்திவைத்திடுவேன்
ஐயமார்தம்மானை அனுப்பிவிடும்அத்தையரே
தாலியுங்கூறையுந் தரிக்குமுடமையெல்லாம்
நேயமாயிருக்கிறது நிலவரமாயிங்கனுப்பும்
இன்றோடேமூன்றுநாள் இருக்கிறதுகலியாணம்
நாளையாத்திரிக்கு நடந்துவரவேண்டுமென்றாள்

மயிரைப்பிடித்திழுத்த கையையும்வாங்கிவிட்டாள்
தாயார்மயிரை தயவாகவாங்கிவிட்டாள்
குறுக்காகநின்றுகொண்டான் கொம்பேரிடையாளும்
கோபமெல்லாந்தீர்ந்தபின்பு குனிந்துமெதெண்டனிட்டாள்
இன்றைக்குமூன்றுநாள் இருக்குதென்றாள்கலியாணம்
நாளைக்குவாருங்களென்று சொன்னாளேசுந்தரியும்
என்றுசொல்லக்கேட்டு எழில்விஜயன்புத்திரனும்
ஆசித்துவாளபிமன் ஆச்சியர்க்குத்தெண்டனிட்டு
என்னஎன்னமாதாவே இன்னமொருக்காலுனையும்
அல்லகாண்சுந்தரியா ளாயன்மகளாரும்
(உன்)மாமியாருநானு மற்பொருதும்வேளையிலே
வந்துபாதம்பணிந்து மயிரைவிலக்கிவிட்டு
என்மைத்துனனார்தன்னையிப்போ வரவிடுங்காண்மாமியரே
அவர்வாராதிருந்தால் அக்கினியில்விழுவேனென்றாள்
இதுவேயுரைத்தாய்காண் இனியொன்றுநானறியேன்
அல்லகாண்மாதாவே ஆயனிடநங்கையரே
அடுத்தஅடிக்காகவல்லோ ஆயன்பதியழிப்பேன்
மங்கைமன்சுந்தரியும் வர்க்குபட்டாளாமாகில்
காணவும்போறேனே கன்னிநல்லாள்சுந்தரியை
ஆணையாய்ச்சொன்னேன்காண் ஆச்சியரேகோபம்வேண்டாம்
சாபதப்பவேண்டாத தாரமெனக்கேனோ
பெற்றதாய்வேண்டாத பெண்டாட்டிநான்வேண்டேன்
வையகத்தில்வார்த்தை உரைக்கிடமாச்சே
பஞ்சவர்கள்வங்கிஷத்தில் பார்த்தன்மகனார்க்கு
பெண்கேட்கபோயிருந்து பெருமாளிடந்தேவிகையில்
அடிபட்டுவந்தேனென்று அனைவருமேசாரோ
தாயாதியேசாரோ சத்துருக்களேசாரோ
காணியாளன்கேட்டால் கனங்குலையஏசாரோ
காணியாளன்கொழுமுன் கழுத்தறுத்துக்கொள்ளுகிறேன்
வாளையுருவி வலக்கைபரிந்துபற்றி
சாவேனேயென்றழுதான் தனஞ்செயனார்புத்திரரும்
கண்டாள்சுபத்திரையும் கனக்கவேதானடுங்கி
பழிக்குப்பிறந்தாயோ பாலகாஎன்வயிற்றில்
வாடாமகனேயோ வையகத்தில்பெண்ணில்லையோ
பஞ்சவர்கள்புத்திரனும் படைபொருதமாட்டாமல்
பொருதுமணஞ்செய்யாமல் போக்கிரிவாளபிமன்
மாண்டானேயென்றுசொல்லி வையகத்தில்வார்த்தையல்லோ
மாறுதிருவாணை மன்னர்கள்தம்மாணை
என்றனாணைநீமகனே என்வார்த்தைதள்ளாதே
வாடாமகனேயென்று வாள்பறித்துக்கீழ்போட்டு
மைந்தனுக்குமாதா மனதுவரவார்த்தைசொல்ல
இத்தனையுங்கேட்டு எழும்பியேவாளபிமன்

அண்டங்கிடுகிடென்ன ஆகாசந்தானதிர
மீசையின்மேல்கைபோட்டு வீரியமாய்வாளெடுத்து
இலக்குணனைக்கொன்று ரணப்பெலிபோட்டுவைப்பேன்
துரியோதனன்கூட்டம் சேனைபரிகலமும்
அதிரவேவெட்டி அவலோகஞ்சேர்த்திடுவேன்
அருச்சுனதன்புரத்தை அடியோடேதாணிடித்து
பருத்தியும்ஆமணக்கும் விதைக்கிறேன்பாருமம்மா
சுந்தரியைக்கொண்டுவந்து சுகமாகத்தாலிகட்டி
உந்தன் அரண்மனையில் ஊழியங்கள்பண்ணவைப்பேன்
என்னை அனுப்புமம்மா எனக்குவிடைதாருமம்மா
தம்பிசொன்னவார்த்தைகளை தான்கேட்டுசுபத்திரையும்
அப்பாமகனே அறிவுள்ளபாலகனே
எப்படிபோகவிட்டு இருப்பேண்டாபூமியிலே
பாலுங்குடித்தரியாய் படைமுகத்தில்நின்றறியாய்
முன்னறியாய்பின்னறியாய் முனைமுகத்திலநின்றறியாய்
இராவறியாய்பகலறியாய் ரணக்களத்தில்நின்றறியாய்
அறியாதபாலகனே அனுப்புவேனாயமுண்டோ
கொஞ்சுமொருபாலகனைக் கூட்டவேனாயமுண்டோ
போகவுமாகாது புத்திரனேநீகேளாய்
(உங்க) ஐயன்மார்வந்தபின்பு ஆனவிடந்தேடி
தையலைக்கொண்டுவந்து தாலிகட்டிவைக்கிறேன்
பூமியிலேபெண்கள் கிடையாதோபுத்திரனே
ரூபசவுந்தரிகள்உலகத்தில்மெத்தவுண்டு
சுந்தரிக்குமிஞ்சினபெண் தேசத்தில்மெத்தவுண்டு
அந்தமுள்ளகன்னியரை யழைத்துமணஞ்செய்கிறேன்
இந்தஇசைகேடும் இல்லாதசண்டைகளும்
வெட்டுவதுங்குத்துவதும் வெறுத்தவரைவெல்லுவதும்
கொண்டாலுமாகாது குலத்திற்கிகழ்ச்சியடா
இப்படியாய்ச்சொல்லி எடுத்துரைத்தாள்சுபத்திரையும்
மாதாமுகம்நோக்கி மைந்தனெடுத்துரைப்பான்
பூமியிழந்தாலும் பெண்டிழந்துபோவாரோ
தாரமிழந்தாலும் தாலியிழப்பதுண்டோ
நாட்டுக்குளேச்சலவோ நாயகியேஎன்தாயே
ஊருக்குளேச்சலவோ உத்தமியேயென்தாயே
இவர்குலத்திலே அழும்புண்டோஎன்தாயே
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
சுந்தரிமேல்போய்விழுந்து துணிந்துகழுத்தறுப்பேன்
எந்தன்கழுத்துகூட சரியாயறுத்திடுவேன்
இப்படியாய்ச்சொல்லி எழில்வீரன்தானுரைத்தான்
தாயார்சுபத்திரைக்கு சரீரமெல்லாந்தானடுங்கி
வயிற்றில்நெருப்பை வாரியெறிந்தாற்போல்
எறிந்துகுலைநடுங்கி எல்லாநினைவுமற்று

பசிக்குநடராஎந்தனுக்குப் பயலேஎழுந்திரென்றான்
தூக்கத்தைவிட்டு துரைமன்னன் தான்விழித்து
அப்போபார்த்தானே பாலன் பாரமுள்ளராக்ஷதனை
கண்டானே ராக்ஷதனைக் கைபிசக்குவந்ததென்று
எண்ணமிவிசாரமிட்டு ஏங்கிமனந்தளர்ந்து
அப்போ ஈஸ்வரனைத்தானினைந்து இருபாதந்தெண்டனிட்டு
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்து
தேவேந்திரனைச் சிந்தையிலேதானினைந்து
எழுந்திருந்துராக்ஷதன்முன் னென்னசொன்னீரென்றானே
கைகட்டிவாய்மூடி கனத்தவிசேஷமெல்லாம்
மெய்யாகச்சொல்லி விடைக்கொண்டான்பாலனுமே

வல்லரக்கனிடத்தில் அபிமன்னன் தலைமுழுகிவருகிறேனென்றது

ஐயாவேகேளும் மடியேன்றன் விண்ணப்பம்
உன்கையில்நான்மடிய வழித்தவசிருந்தேன்
உன்னிடந்தேடிவந்தே னொருவிடமும்நானறியேன்
செத்தவிடமோட்சம் சேரனுமையாவே
நித்திரைகொண்டாலே செத்தமறியாதைய்யல்லோ
ஐயாவேயென்னுடம்பு அழுக்காயிருக்குதுகாண்
முழுகிக்குளித்துமே முன்வந்துநிற்கிறேனுன்
பசியாலேயென்னையப்போ பசியாற்றிக்கொள்ளுமென்றான்
நல்லதென்றுவல்லரக்கன் ஞாயமுள்ளமன்னனென்று
ஆற்றுக்குநீர்போய் அப்படியேதலைமுழுகி
சீக்கிரமாய்வாருமென்று சொன்னானேவல்லரக்கன்

அபிமன்னன் இந்திரனை வரங்கேட்கத் தவஞ்செய்தல்

நல்லதென்றுபாலனுமே நடந்தானேஅப்பொழுது
கைபிசகுவந்ததே கைவாளுமில்லையென்று
எண்ணிவிசாரமிட்டு ஈசர்செயலென்றுசொல்லி
ஆற்றிலேபோயிறங்கி அபிமன்னராசாவும்
முழுகித்தலைபாற்றி முக்கணனைப்பூசைபண்ணி
கிழக்குமுகமாக யிருந்துமேகிருபையுடன்
சூரியனைத்தெண்டனிட்டு தோத்திரங்கள்செய்தானே
ஆயிரத்துனூற்று அருந்தவங்கள்செய்தேனே
கடலிலெழுகின்ற கதிரோனேசரணமென்றான்
பச்சைக்குதிரையுள்ளாய் பனிப்பகையானவனே
அழகுடன்னிரண்டுடைய ஆதித்தாசரணமென்றான்
அருச்சுனனார்புத்திரன் அபிமன்னனடைக்கலமே
அப்போகதிரோனும் அதிசயமாய்த்தான்பார்த்து
கண்டறியவேணுமென்று கதிரோனிறங்கிவந்து
ஆரடாபையாநீ அழைத்ததென்னசொல்லுமென்றான்
சூரியரேயென்வரவு சொல்லுகிறேன்கேளுமையா

தருமருடன்பிறந்த தனஞ்செயனார்புத்திரனான்
என்பேர்அபிமன்னன் என்பாட்டனிந்திரன்காண்
மாயன்மகள்சுந்தரியை மணஞ்செய்யவேணுமென்று
வழிதப்பிவந்தேன் வல்லரக்கன்போகவொட்டான்
எதிர்த்துப்பொருதவென்றால் என்கையில்வாளுமில்லை
அந்துவானகானகத்தி லகப்பட்டேன்சூரியனே
வல்லரக்கன்கையிலே மடிந்துவிட்டோமாச்சு
பொருதவென்றால்வாளுமில்லை போகவென்றால்போகவொட்டான்
ஆதித்தாநீர்கேளும் ஆகையினாலழுதேன்
வாராய்நீவாளபிமா கேளொருவார்த்தை
வல்லரக்கனைசெயிக்க வலுமையில்லையேந்தனுக்கு
கிலிக்கெழுந்திராக்கள் கிரணங்கள்தன்னுடனே
என்றுசொல்லிஇந்திரனும் இனிவாளைச்சாபமிட்டார்
கதிரோனைத்தானழைத்து கனத்ததேர்நடத்துமென்றார்
பின்னையுமிந்திரனார் பெருகவேதானினைந்து
வாளொன்றுபோதாது மன்னனபிமருக்கு
பாளமும்வில்லும் பத்திரகாளிகோவிலிலே
அடைக்கலமாய்வைத்தார்கள் ஐவரிடஆயுதங்கள்
வகையுடனேவாங்கிவந்து மன்னனுக்குத்தருகவென்று
முப்பத்துமுக்கோடி தேவர்முனிவர்களும்
நாற்பத்தெண்கோடி ராஜரிஷியோரும்
இந்திரனுந்தேவருமெல்லோருந்தான்கூடி
வந்தார்கள்பூமியிலே மாகாளிகோவிலண்டை
தேவனைக்கண்டு திடுக்கிட்டுமகாதேவி
வீரமாகாளி வினவினள்கோவிலண்டை
வந்தவகையென்னவென்று மனங்குளிரக்கேட்டாளே
தேவேந்திரனுந் தெரியவேசொல்வாராம்
எந்தனிடபேரனுக்கு இளைப்புமெத்தவந்ததுகாண்
உந்தனடைக்கலமாய் வைத்திருக்குமாயுதத்தை
எந்தனிடபேரனுக்கு எடுத்துதரவேணுமென்றார்
அருச்சுனனார்காண்டீபம் அம்புறாத்தூணியுமே
இப்பொழுதேநீதானெடுத்துக்கொடுங்களென்றார்
தேவேந்திரனுந் தீவிரமாய்க்கேழ்க்கலுமே
வீரமாகாளி விசேடமுரைத்தாளே
ஐவரும்வந்து அடியேனாண்மையில்
அடைக்கலமாய்வைத்த ஆயுதங்களையான்கொடுத்தால்
நடக்குமோ ராயர்கள் நான்கொடுப்பதில்லையென்றாள்
அதை-தேவேந்திரன்கேட்டு தேவிமுகம்பார்த்து
மாகாளிதன்றனக்கு மறுவார்த்தையேதுரைப்பார்
பாருள்ளராசாக்கள்தன்கையில் பாளையகப்பட்டதுவும்
பொல்லாதராட்சதனும் புசிக்கநினைத்ததுவும்

நல்லதென்றுபாலன் நம்மையினை ஊட்டுதுவும்
எல்லோருங்கூடி யிளப்புவந்ததென்றுசொல்லி
பாலனைத்தப்பிவிட வந்தோமேகாரிகையே
(நீ) மாட்டேனென்றுசொன்னால் மடிந்திடுவான்பாலனுமே
அபிமன்னன்மடிந்தாலே அருச்சுனனுந்தான்மடிவார்
மெத்தப்பழிகள் விளைத்திடுமேபாலனுக்காய்
காண்டீபம்வில்லும் கடுகெனவேநீகொடுத்தால்
ஒருநாழிகைக்குள்ளே ஒப்பிவைப்பேனுன்கையில்
என்றவருஞ்சொல்லி இதமாயெடுத்துரைத்தார்
வீரமாகாளியரும் விரும்பிமனதுவந்து
அருச்சுனனாயுதத்தை அவர்கையிலொப்புவித்தாள்
பார்த்தாரேயிந்திரரும் பாரவில்லுமாயுதத்தை
ஆயிரங்குலவன்னடி அடங்காதபாரமிது
போயுதவமாட்டாது பிசகுவருமென்றுசொல்லி
என்றுவிசாரமிட்டு இந்திரருமப்பொழுது
ஓலைப்பூவாக ஒளிவுடனேதான்சபித்து
காளியைப்பார்த்து கதிரோனுமிந்திரனும்
நாங்கள்கொண்டுபோக நடக்காதுகாளியரே
இப்படியேபோனால் இராசசூதன்தான்பார்த்தால்
எக்குத்திரிமவொட்டான் எமகண்டசண்டாளன்
அதிலேநாங்களெய்க்கவோமவன்தனக்கு
கொண்டுபோய்நீகொடுக்கா உன்குமாரனபிமனுக்கு
என்றுசொல்லக்காளியரு மிதுவோசிலபாரமென்று

(காளி அபிமன்னனுக்கு வாள்கொடுப்பது)

வாளைச்சடையிலே மங்கையருந்தான்சொருகி
வில்லம்புபாணமெல்லா மேனியிலேபூஷணமாய்
கட்கத்தைவாய்தனிலே கவ்வியந்தகாளியரும்
மச்சத்தைவிச்சுளிதான் வந்தொருகால்பாய்ந்ததுபோல்
தக்கதொருதுர்க்கையருஞ் சலத்திலேபோய்பாய்ந்தாள்
நீர்நாகம்போலேயல்லோ நீந்திவாராள்கங்கையாற்றில்
வாள்கொண்டுநீரில்வரும் மாதாவைகண்டானே
ஆசித்துவாளபிமன் அம்மையைத்தோத்தரித்தான்
மாயனிடதங்கையரே மகாதேவன்தேவியரே
சூலிகபாலியரே துரந்தரிதுர்க்கையரே
நீலிதிரிசூலி நிரஞ்சனியேகவல்லி
பிள்ளைதுயர்தீர்க்கும் பெருமையுள்ளமாதாவே
மைந்தனைக்காப்பாற்றும் மாதாவேநான்சரணம்
மாதாபரஞ்சோதி மைந்தருக்குபுத்திசொல்லும்
வாழ்த்தியேவாள்தாரும் வல்லரக்கனைஜெயிக்க
என்றதொருசகாயத்தை யேகவல்லிதான்கேட்டு
மைந்தனைப்பார்த்து மகிழ்ந்துரைப்பார்காளியரும்

பாணம்வருகிறதைப் பார்த்தந்தவல்லரக்கன்
நூணிக்கையாகவே பிடித்துப்பிசைந்துவிட்டான்
பார்த்தானேவல்லரக்கன் பாணம்பின்வருகுதென்று
கல்லுமலைகளும் கனமலைகளுள்ளதெல்லாம்
மெல்லாம்பிடுங்கி இடிபோலேதான்சொரிந்தான்
வந்தமலைகளும் மற்றுமுள்ளகாடுகளும்
பஞ்சிபோல்தான்பறக்கப் பார்த்தானேபாலனுமே
வல்லரக்கன்கோபங்கள் பட்டிடப்போகாது
வெல்லும்பெருமலையை வேரோடேதான்பிடுங்கி
நல்லஅபிமன்னன் நடுத்தலையிற்போட்டானே
மாறுபெருமலையை வாளபிமன்தான்கண்டு
ஆறுகணைதொடுத்து அறுத்தான்பொடியாக
இரண்டுமலைபிடுங்கி இராட்சதனும்விட்டெறிந்தான்
இரண்டுமலைகாலாக இளைவாளால்வீசிவிட்டான்
பெலத்துடனேவல்லரக்கன் பெரும்புலிபோல்சிரித்து
கள்ளப்புதுமையிது யிவ்வுலகிற்கண்டதில்லை
இந்தப்பாதகனுழி யெடுத்துவரதோம்தின்னவென்று
எடுத்துவிழுங்கிவிட்டா னிங்கேரப்செறித்துவிடும்
கரிபெரிதாக்கால்கிளைகளென்று காட்டில்கைதட்டேயே
இவ்வொருவெல்பாரென்றெழுந்தான் ராட்சதனும்
மூன்றுமலைபிடுங்கி மூர்க்கன்மேல்விட்டெறிந்தான்
மூன்றுமலைதூளாக முடியறுத்தான்வாளபிமன்
நாலுமலைபிடுங்கி ராட்சதனும்விட்டெறிந்தான்
நாலுமலைதூளாக நறுக்கடித்தான்வாளபிமன்
ஐந்துமலைதான்பிடுங்கி அபிமன்மேல்விட்டெறிந்தான்
ஐந்துமலைதூளாக்கி அபிமன்னனெழுந்திருந்து
ஆறுமலைபிடுங்கி அபிமன்னனெழுந்திருந்து
ஆறுமலைதூளாக்கி அபிமனப்போதேதுசொல்வான்
ஏழுகணைதொடுத்து இராட்சதன்மேல்விட்டானே
மார்பிலேபட்டு வருகுதுஉதிரமங்கே
வல்லரக்கன்கோபித்து மலைபிடுங்கிக்கைபிடித்து
பூமிஅதிர்ந்துவிழ பூலோகம்நெக்குவிட
அண்டமதிர்ந்துவிழ ஆகாயம்நெக்குவிட
கதிரோனும்சந்திரனும் கதிதப்பிப்போய்மறைய
வனத்திலிருகமெல்லாம் மருகடலாடிவிட
சிங்கங்களெல்லாம் சீறியெழுந்தார்போல்
ஆனைகளெல்லாம் அடித்துயெழுந்தாற்போல்
ஈரேழுலோகமெல்லாம் கிடுகிடென்றுதானதிர
எதிர்த்தாரிருவருமே இருண்டவனந்தனிலே
ஒருவர்க்கொருவர் உறத்ததுதெப்பையங்கே
வாடாவல்லரக்கா உன்வாணுளழிக்கவந்தேன்

கேளடாவல்லரக்கா உன்கெருவமடக்கவந்தேன்
நில்லடாவல்லரக்கா நீயோடிப்போகாதே
என்றுசொல்லவல்லரக்க னிருபுதுணையென்றுசொல்லி
ஏழுமலைபிடுங்கி எதிர்த்தானேவல்லரக்கன்
ஏழும்பகினலா யிழுக்கடித்தான்வாளபிமன்
எட்டுமலைபிடுங்கி விட்டெறிந்தான்ராட்சதனும்
எட்டுமலைபட்டுவிழ இனைவாளால்வீசிவிட்டான்
பத்துமலைபிடுங்கி பையல்மேல்விட்டெறிந்தான்
பத்துமலைசிதற பறக்கடித்தான்வாளபிமன்
கோபம்வந்துவல்லரககன் கோடைபிடிபோலே
வேகாளமாகவந்து விழுந்தானேவல்லரக்கன்
பார்த்தானேபாலன் பாவியிடசத்துவத்தை
அறுத்தானேவாளபிமன் அவனங்கம்பொடியாக
விழுந்தானேவல்லரக்கன் மேனியெல்லாந்தானடுங்க
கண்டானேபாலன் கபடானராட்சதனை
துண்டாகவேவெட்டித் துணிக்கவேவேணுமென்று
வாளுருவியோடிவந்தான் மாயோன்மருகோனும்
காளையானவல்லரக்கன் கண்கெனவேதானெழும்பி
மலைகளெல்லாம்மாண்டிடவே மரம்பிடுங்கியோடிவந்தான்
வாடாநீவல்லரக்கா கேளாயொருவார்த்தை
மலைபட்டபாடுதான் மரங்களென்னசெய்யுமடா
கிட்டவாடாராட்சதனே வெட்டிப்பெலியிடுவேன்
கார்கொண்டவல்லரக்கன் கையிரண்டுந்தானீட்டி
ஈரலிலேகுத்தி யெடுத்துவிழுங்கவென்று
நீட்டினான்கையை நெடியமரம்போலே
வல்லரக்கன்தான்வரவே வாளபிமன்தான்சிரித்து
எத்தனைநேரம் இவனுடனேபோராட்டம்
மந்திரவாளெடுத்து வாளபிமன்கைபிடித்து
அரக்கனிடகையிரண்டும் அறுத்தானேவாளாலே
கூவினான்வல்லரக்கன் கொடிமுடிதானதிர
ஆவென்றசத்தம் அடங்கிகிடுகிடென்ன
ஆகாயம்பூமி அதிர்ந்துநடுங்கிடவே
சத்தசமுத்திரமும் சலம்வற்றிஉள்ளடங்க
சந்திரர்சூரியர் தானடுங்கியோடிவிட
முப்பத்துமுக்கோடி தேவர்களுமுனிவர்களும்
தேவேந்திரன்கூட திகைத்துமுகம்பார்க்க
வல்லரக்கன்சண்டை பலவந்தமாச்சுதென்று
சொல்லிநகைக்கிறதும் சூட்சங்கள்பேசுறதும்
இப்படியாய்ச்சொல்லி யிருக்கிறவேளையிலே
பையலபிமன்னன் பாணசரத்தாலே

வல்லரக்கன்இறந்துவிட்டது

விழுந்தானரக்கன் மேருமலைத்துண்டதுபோல்

உன்- அம்மானரக்கனுக்கு ஆபத்துவந்துதென்று
என்னைநினைத்து இடிபோலேகூச்சலிட்டான்
போயறியவேணுமடா போர்புரியும்வீரியனே
ஏதடிதாயாரே எங்களம்மான்றனக்கு
ஆபத்துதான்வருமோ அம்மாளேநீர்கேளும்
ஆகாயம்பூமி அதிர்ந்துவிழுந்தாலும்
தேவர்களானாலும் ஜெயிக்கவேபோகாது
எங்களம்மான்வல்லரக்கனிடிக்குச்சமானமுள்ளான்
என்றுகடோர்க்கஜனு மெடுத்துரைத்தானப்பொழுது
அப்படியல்லவடா அறியநீதம்பிரானே
போயறிந்துவாருமென்று போகவிடைகொடுத்தாள்
அப்படியேநல்லதென்று அடிவணங்கித்தெண்டனிட்டு
தெண்டுகமண்டலமும் திடமானவில்களையும்
எடுத்தேறக்கட்டி இடிபோலேகொக்கரித்து
மறித்துமவனுரைப்பான் மாதாமுகம்நோக்கி
அம்மானுக்காபத்து வந்துதென்றுசொன்னீரே
அவனைச்செயிக்கிறவ ராருமில்லைவையகத்தில்
சிவன்பிர்மாவிஷ்ணுவும தேவேந்திரன்முதலாய்
எமதர்மனானாலு மெதிர்விழிக்கப்போகாது
அப்படிக்கொத்தவன்மேலார்சண்டைசெய்வார்கள்
கூப்பிட்டானென்று கோதையரேசொன்னீரே
அப்படியேமெய்யாய்த்தா னபத்தேயானாலும்
கஞ்சிகொண்டுபோனால் தனக்குதவுமாதாவே
காவடியிகட்டி கனமாகயிப்பொழுது
கொண்டுபோகவேணுமென்று சொன்னான்கடோற்கஜனும்
அவ்வசனங்கேட்டு அம்மாள்கமலகன்னி
கடுக்கவேதாதியரைக் காதலுடன்தானழைத்து
பதினாயிரக்கலம்பச்சரிசிதானெடுத்து
கொள்ளுஇருகலம் கூடவேதான்கலந்து
கஞ்சியாக்காச்சி காவடியும்வையுமென்றாள்
பன்னைபறட்டை பருந்தும்பைபின்னையுடன்
ஏனைவகையுடைய இலைக்கறிகளுள்ளதெல்லாம்
குன்றுபோல்தான்பிடுங்கி கொப்பறையில்தான்சமைத்தாள்
பிரட்டியுரட்டி பெருமலைபோல்தான்திரட்டி
கஞ்சியொருபக்கம் கறிகளொருபக்கமுமாய்
வைத்தார்கள்காவடியில் மலைபோலேராட்சதிகள்
எடுத்தான்கடோற்கஜனும் இருதோளுந்தானசங்க
கொப்பரையில்கஞ்சி குதிச்சிதளும்பவேதான்
சீக்கிரமாய்த்தானடந்தான் சிறுவன்கடோற்கஜனும்
கால்நடையாய்த்தானடந்து கடுகிவருவானே
பச்சைமலைதேடி பவழமலைதான்தேடி
கொல்லிமலை ஆராய்ந்து குடகுமலைதான்தேடி

கொன்றவனைக்காணுமோ கொற்றவனேசொல்லுமென்றான்
அம்மானைக்கொன்றவனை அறியாயோபாலகனே
அவ்விசேஷங்கேட்டு அபிமன்னராஜாவும்
சொன்னனேவாய்திறந்து சூதானவார்த்தைதன்னை
ராட்சதனைக்கொன்ற நற்பாலனிப்பொழுது
வடக்குமுகமாக போனான்மலைபோலே
திக்கென்றுதானோடி தீவிரமாய்ப்பாருமென்றான்
அப்படியேபோனான் அவன்சொன்னசாடையெல்லாம்
தேடியேகாணாமல் திரும்பிவந்தான்பாலனண்டை
காணேனென்றுசொல்லி கவலையுடன்தான்கேட்டான்
தெற்குவடக்கு தென்மேற்குதென்கிழக்கு
நாலுதிக்குமோடி நலமாகப்பார்த்தானே
அரக்கனைக்கொன்றவன் அகப்படுவானென்றுசொல்லி
ஓடியேபாருமென்று உத்தாரம்பண்ணினனே
பூனையையானைப்போல் பெரும்புலிபோல்தான்திரிந்து
தேடிப்பிடித்தவனைச் சீக்கிரமாய்க்கொல்லுமென்றான்
அவ்வார்த்தையைக்கேட்டு அப்பவேதானோடி
நாலுதிக்குமோடி நாட்டமுடன்பார்த்தானே
காடுமலையும் கடியவனந்திரமும்
வடகடலும்தென்கடலும் மற்றுமுள்ளதீவுகளும்
திட்டமுடன்பார்த்து திரிந்தெங்குங்காணாமல்
எங்கேயுங்காணாம லேங்கிவிசாரமிட்டு
மறுபடியும்தான்வந்து வருத்தமுடன்கேட்டானே
கேட்டவுடனே கிருபையுள்ளபாலனுமே
உன்-அம்மானைக்கொன்றவனை அவனைநீகண்டாக்கால்
என்னதான்செய்வாய் எனக்கறியக்கூறுமென்றான்
சொல்லுமென்றுகேட்கவுமே சுருக்காகத்தானுரைப்பான்
என்-அம்மானைக்கொன்றவனை அறிந்தேனேயாமாகில்
வெட்டிபலியிடுவேன் வீரமாகாளியற்கு
குத்திவகிர்ந்து குடலீரல்தான்பிடுங்கி
வெட்டி தலைபிளந்து வீட்டெறிவேன்நாலுதிக்கும்
நன்றாயுடல்பிளந்து நாலுதிக்கும்போட்டிடுவேன்
என்ன-கடோர்க்கஜனும் பேதுறைப்பான்பாலனுமே
கோபித்துக்கண்சிவந்து கொக்கரித்துஅப்பொழுது
அடங்கியிருந்தாக்கா லரக்கனும்சண்டைசெய்யான்
ஆவித்தடிபாய்ந்து அபிமருங்கொக்கரித்து
வெட்டிவைவன்காணிருக்க பட்டிமகன்தேடிவந்தேன்
ஆரடாராட்சதனே அரக்கனுக்குநீயுறவோ
பாராயரக்கனிட்ட பாடுபடப்போறாயோ
வாடாநீசக்கிரத்தில் மஞ்சனமாட்டுதேன்
போராடவெய்துவேனுன் புகழினிபோகாதே
கொற்றவனும் [illegible]

உன்-அம்மானைக்கொன்றதொரு ஆண்பிள்ளை நான்தாண்டா
கடோர்க்கஜனுக்கும அபிமன்னனுக்கும்யுத்தம்
என்னோடேசண்டைக்கு எதிர்த்துவாடாவென்றுசொன்னான்
தாவியேவில்லெடுத்து சரபாணம்தான்தொடுத்து
காளையபிமனுடன் கடோர்க்கசனை துலைப்பான்
வாராய்சிறுபயலே,யென்னம்மானைக்கொன்றவனார்
உனக்குதுரைதானோ ஒளித்துவைத்தால்சொல்லுமென்றான்
உன் துரையுநான்தாண்டா உன்னம்மானைக்கொன்றவனான்
நீயெதிர்த்தாலும்மையும் இருபிளவுசெய்வேனென்
என்றுசொல்லவாளபிமன் ஏங்கிகடோர்க்கசனும்
பக்கத்தில்வாளைவைத்து பஞ்சமாய்ச்சொல்லுகிறேன்
உள்ளே அழைத்துக்கொண்டு துள்ளித்திரிகிறான்காண்
மடிந்தவனைப்பார்த்தால் மலைபோல்பெரியவன்காண்
துணித்தவனைப்பார்த்தால் துரும்பில்சிறியவன்காண்
முன்னேபெரியோராக னுரைத்தமொழிப்படியே
சிறியதெல்லாம்பெரியதுக்கு யிரையென்றுசொல்வார்கள்
பெரியதெல்லாம்சிறியதுக்கு இரையாச்சுதையாவே
இந்தப்புதுமையை யினியறியவேணுமென்று
மூந்நூறுமுழக்கச்சை மூணுசுற்றாயிறுக்கி
எழுநூறுயானை யிழுக்கவொண்ணாதெண்டுகளை
சுற்றியெடுத்து தோளின்மேல்வைத்துக்கொண்டு
பொருதுமப்பாவென்றுசொல்லி போர்க்களத்தில்வந்துநின்றான்
இருப்புலக்கைகைப்பிடித்து எறிந்தானவன்தலைமேல்
வருகிறதண்டையவன் வாளாலேதட்டிவிட்டான்
காதவழியெழும்பி கால்மேலேவந்துவிழும்
கடோர்க்கஜன்தானெழும்பி கடுங்கோபந்தானாகி
பாரமலைபிடுங்கி பாலன்மேலேவிட்டெறிந்தான்
அந்தமலையை அபிமன்னராஜாவும்
பந்தடிக்குந்தன்மையைப்போல் பறக்கடித்தான்வாளபிமன்
கடோர்க்கஜனப்பொழுது கனகோபங்கொண்டெழுந்தான்
வில்லையெடுத்து வீரிட்டகடோர்க்கஜனும்
ஆயிரம்பாணம் அபிமன்மேல்போய்விழவே
உபதேசம்பண்ணி உக்கிரமாய்விட்டானே
பாலனதுகண்டு பாசியவில்லெடுத்து
தூளாகிப்போகத் தொடுத்தானெதிர்ப்பாணம்
பாணமும்பாணமும் பரவியெதிர்கொண்டு
பாளையாகப்பறந்து துணித்துவிழுந்ததுகாண்
ஐந்நூறுபாணம் அபிமன்னராஜாவும்
அரக்கன்தலைவிழவே அந்நேரம்விட்டானாம்
கடோர்க்கஜன்கண்டுமே கையாலேதட்டிவிட்டான்
வடக்கேயெறிந்துவிட்டான் வாளபிமன்பாணத்தை
கோபித்துபாலனுமே கோடையிடிபோலே

வாய்விட்டுக்கூறி மறுபாணந்தான்தொடுத்தான்
ஆயிரத்துமூன்று அதிர்பாணந்தான்தொடுத்தான்
மாயக்கடோர்க்கஜனும் வந்ததொருபாணமெல்லாம்
ஓயாமல்தட்டி உதிரடித்தான்பூமியிலே
கடோர்க்கஜன்தெண்டாலே கணைமார்பில்தானறைந்தான்
வாளாலபிமன் வருந்தெண்டை தட்டிவிட்டான்
தெண்டையிடையவைத்து திகைத்துமனம்வெருகி
முத்துமுடியசைத்து மூக்குமேல்கையைவைத்து
இந்தஉலகிலெவருமெதிரில்லை
கச்சுகட்டுமுள்ளடியும கட்டுமந்திரவாளழகும்
ஓட்டிப்பொருதுவது உடையும்நடையழகும்
நம்முடையவங்கிசவான் போலேயிருக்குதென்று
ஈஸ்வரனோவிஷ்ணுவோ எழுதும்பிரமாவோ
சூரபத்மனைச்செயித்த சுப்பிரமணியரோ
கஜமுகனைக்கொல்லவந்த சண்முகவிக்கினரோ
தக்கன்தலையறுத்த தனிவீரபத்திரரோ
ஐவர்க்குரியவரோ ஆதிநாராயணரோ
ஆரடாபயலேயென்று அதட்டியேகேட்கலுற்றான்
எனக்கேட்கக்கடோர்க்கஜனு மேதுரைப்பான்பாலனுமே
வாராய்நீராட்சதனே கேளாயொருவார்த்தை
காவலழிக்கவந்தேன்கடூரபேசவந்தேன்
உன்-பலத்தைக்குலைவறுப்பேன்வல்லுயிரைக்கொள்ளைகொள்வேன்
உன்னம்மான்தன்னுடனே அனுப்பவந்தேனுன்னையுந்தான்
பொருதடாவென்றான் போகாதேநில்லென்றான்
கனவீமன்பெற்றெடுத்த கடோர்க்கஜன் தான்கேட்டு
வாடாசிறுபயலே கேளாயொருவார்த்தை
என்னம்மான்பழிதீர மண்டைசிதறடிப்பேன்
போவீரேயாமாகில் போகவொட்டேனுன்னை
என்றுசொல்லியப்பொழுது இருவருமேதானெதிர்த்தார்
தெண்டால்கடோற்கஜனுந் தீவிரமாய்த்தானடித்தான்
பந்துவிழுந்தாற்போல் வந்துவிழும்பாலகற்கு
அப்போதுபாலனுமே அனலாயெரிபறந்து
வாளாலேவெட்டினான் மன்னன்கடோற்கஜனை
பூமாலையாகவே போந்தது அவன்கழுத்தில்
கண்டான்கடோற்கஜனும் கபடுவந்ததென்றுசொல்லி
ஏறநினைத்து எண்ணமிட்டுக்கடோற்கஜனும்
இதையறியவேணுமென்று அபிமனண்டைவந்துநின்றான்
தம்பிசிறுபிள்ளாய் சமர்த்தாய்நீசண்டைபண்ணாய்
விந்தையாயென்மனதில் சந்தோஷந்தானாச்சு
உன்பேரைச்சொல்லிப் பொருதடாதம்பியென்றான்
வாடாநீராட்சதனே மாமன்பழிவாங்கவந்தாய்

ரணக்களத்திவ்பெருமைத்தால் ராச்சியத்தில்கேட்பாரோ
படிகளததிலொப்பாரி கேட்பாரோபார்வேகதா
ஊர்பேர்தான்கேட்பார்களுற்றகவிவாணர்
என்பேனைநீகேட்க என்பேரில்கவிபாடுகைவயோ
பெருமிக்கையூருமில்லை பொருதுவோய்வாடாவென்றான்
அப்போகடோற்கஜனும் அபிமநுடனேதுசொல்வான்
உம்முடையவூர்பெயரை எடுத்துமுன்னேசொல்வேனே
பிற்பாடுசொல்கிறையோ பெருமையுள்ளசிறுபிள்ளாய்
ஊர்பெயரைததான்கேட்கவென்றாலும்முடையஆயுதத்தை
கடக்கவெறிந்துவிட்டுக் கைகட்டிவாய்புதைத்து
வித்துவர்கள்போலத்தான் விசனத்துடன்கேட்டால்
சொல்லுவேனேசொல்லுவேனே துரைமன்னேவெப்படியோ
என்றுசொல்லிவாளபிம னெழுந்திருந்தப்பொழுது
உயர்ந்தமரந்தனிலே உற்றவாள்தான்சாத்தி
கால்மேலேகால்போட்டுக் காலையுமூட்கார்ந்தானே
அப்போகடோற்கசனும் அபிமனைத்தான்பார்த்து
ஆகாவழிப்பயலேயுன் அகுலக்கதைச்சொல்லுகைக்கு
வெட்கமவையோயாமாகில் விளம்புகிறேன்கேளடா
கண்ணேடேசொல்லாதே யெதிர்மரத்தில்சொல்லுமென்றான்
சட்டையற்றுவாளபிமர் சதிராகவிற்றிருந்தார்
காலைமுகம்பார்த்துக் கடோற்கஜனேதுரைப்பான்

கடோற்கசனும்அபிமன்னனுஞ்சமாதானமாவது

தர்மர்பெரியப்பன் தமக்கிளையனென்தகப்பன்
அருச்சுனன்சிற்றப்ப னவர்க்கிளையானென்தகப்பன்
நகுலசகாதேவர் நல்லதொருசிற்றப்பர்
இவருக்குந்தேவி யழகானதிரௌபதையாள்
சந்தனுக்காச்சியென்று எடுத்துரைத்தான்கடோற்கஜனும்
உறங்குவானேயாண்டு உருட்டுவான்தென்மலையை
இணங்காமலைகளெல்லாம் வெள்ளுப்பொடியாகும்
விடமானநஞ்சைஉண்ட வீமசேனனென்தகப்பன்
என்மாதாகமலகன்னி யென்பேர்கடோற்கஜன்காண்
என்றுசொல்லக்கடோற்கசனு மேங்கியேவாளபிமன்
கேட்டிருந்துபாலன் கிடுகிடென்றுதானடுங்கி
கூடுகிவாள்விட்டெறிந்து கடோற்கஜனருகில்வந்து
முகத்திலறைந்துகொண்டு மூர்ச்சையாய்த்தான்விழுந்தான்
மூர்ச்சைதெளிந்தபின் முகம்பார்த்தேதுரைப்பான்
அண்ணேகடோற்கசனேயறியாமற்கொடுமைசெய்தேன்
அண்ணரோடேமற்பொருதி யனேகதோஷம்வந்ததுகாண்
தமயனோடம்பொருதி சாமத்துரோகியானேன்
என்று-பச்சைத்தழையொடித்துப் பாதத்தின்மேற்போட
இவர்குலத்தில்வந்த அழகானஅண்ணாவே

அருச்சுனனார்பிள்ளை யபிமன்னனென்றானே
என்தாயார்சுபத்திரையாள் என்தகப்பனருச்சுனனார்
இருவரும்ஒருகுலத்தி லிழுக்கவிருந்தோமே
என்றுசொல்லியப்போ இருவருந்தானெழுந்து
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
அப்பாநீயெங்கேவந்தாய் அபிமன்னராசாவே
வல்லரக்கன்கையிலே மாளத்திரிந்தாயே
மெத்தவிசாரமிட்டு வெகுவாய்மனமுருகி
இந்தையுடன்கலியாணச் சேதியெல்லாம்சொன்னானே
அப்படியேயாகுதுகாண் அபிமன்னராசாவே
ஒப்பமுடன்சொல்லி யுரைத்தான்கடோற்கஜனும்
அம்மானைத்தானெடுத்து அடக்கம்பண்ணவேணுமென்று
பட்டமரங்கள் பருங்கட்டையுள்ளதெல்லாம்
எடுத்துவைத்துமூட்டி எரிதணலுமிட்டார்கள்
கொள்ளியும்வைத்துக் குடமுமுடைத்தார்கள்
செய்யும்வரிசையெல்லாம் செய்துமுடித்தார்கள்
ஆற்றிலேவந்தார்கள் அலைமத்தலைமுழுகி
சத்திசிவபூசையெல்லாம் செய்துமுடித்தார்கள்
வந்தார்கள்கஞ்சியண்டை பாலனுங்கடோற்கஜனும்
கஞ்சியும்லக்கிரியும் கண்டானபிமராசன்
ஏதடா அண்ணாவே யிலைக்கறியுங்கஞ்சிகளும்
என்று அபிமன்கேட்க எடுத்துரைத்தானப்பொழுது
அம்மாள்கமலக்கன்னி யனுப்பிவைத்தாளண்ணனுக்கு
கொண்டுவந்துவைத்தேன் குடிப்போம்வாதம்பியரே
அப்படியேயண்ணாவே யமர்ந்துகுடியுமென்றான்
இன்பமுடன்கொப்பரையை எடுத்துவந்துவைத்தானே
பின்னையொருமுச்சாய் குடியுமென்றுதான்வார்த்தான்
அஞ்சுசிரங்காகஞ்சி யபிமன்னன்குடித்தபின்பு
கஞ்சிவிடாய்தெளிந்து களைகளுந்தான்மாறி
கொப்பரையில்கஞ்சியெல்லாம் குடியுங்களண்ணாவே
இலைக்கறியுங்கஞ்சியு மெல்லாங்குடித்துவிட்டான்
வந்தார்களாற்றிலே வாய்களைத்தான்கழுவி
கொப்பெனவேதானுங் கூடியிருவருமாய்
அம்மாள்கமலகன்னி யரண்மனைக்குத்தான்வரவே
வந்தாரிருவருமாய மலைமறைவில்வந்துநின்றார்
பாலனபிமன்னன் பதில்வார்த்தைகூறலுற்றான்
அண்ணாவேநானும் அரண்மனைக்குவாரதில்லை
என்னையுங்கொல்லுமென்று சொல்வாளோதாயாரும்
அம்மாமனதை யறியவேபோகாது
அண்ணாவேமுந்திப்போய் அறிந்துநீவாருமென்றான்
நல்லதுதம்பியென்று நடந்தான்கடோற்கஜனும்
அம்மாள்கமலகன்னி ஆசாரசசாவடியில்

கண்டானேதாயாரைக் கைகுவித்துத்தெண்டனிட்டான்
அப்பாமகனேயுங்க ளம்மானேக்கண்டாயோ
நன்றாயிருக்கிறனோ நாயகயேயென்பிறப்பு
உன்னம்மான்முகத்தை உறுதியாய்க்கண்டாயோ
காரியமாய்ச்சொல்லுமென்று கமலகன்னிதான் கட்டாள்
யாதாவுஞ்சொல்ல மறுவார்த்தைகூற லுற்றான்
அம்மானைக்கொன்றானடி யபிமன்னராஜாவும்
பாலகனைக்கொன்றானடி வல்லரக்கனுங்களன்னன்
இருவரும்பட்டு எமலோகம்போனாகள்
என்றுசொல்லித்தானுரைத்தா னிவள்மனதைத்தானறிய
அவ்விசேடங்கேட்டபின்பு அமபாள்கமலகன்னி
அடித்துப்புரண்டு அழைந்துகொண்டாள்மார்மேலே
அபிமன்னராஜாவை அவன்கோல்லக்காரியமேன்
அறியாதபாலகனை அடித்திழுத்துப்போட்டானோ
பாவிபழிகாரன் பாலகனைகொன்றானே
ஆகாதவல்லரக்க னவன்செத்தாலாகாதோ
பாலனபிமன்னன் மாண்டால்மனம்பொறுக்கேன்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
பபிமன்னன்தன்னுடனே யாவிதன்னைப்போக்கிடுவேன்
மகனையிழந்துநான் மண்ணிலிருப்பதில்லை
ஐவர்வெளியாகி யருச்சுனருங்கேட்டாக்கால்
ராச்சனுக்குப்பேசசு யினை யூறுவந்துவிடும்
அபிமன்னன்தன்னுடனே யென்னுயிரைப்போக்கிடுவேன்
அப்போமடியாதே ஐவர்முகம்பாராதே
இப்போமடிந்திடுவே னென்மகனார்தன்னுடனே
அம்மானேகடோற்கஜா வளர்த்திவிடு அக்கினியை
என்றுகமலகன்னி யெழுந்தாள்துயரமுடன்
அம்மான்மனதை யறிந்துமேகடோற்கஜனும்
தம்பிசெத்ததில்லையம்மா தாயாரேயென்றுசொன்னான்
உன்குணத்தைதானறிய உரைத்தேன்காண்தாயாரே
தம்பிசுகமாகத் தாயாரேவந்தான்காண்
என்றுசொல்லிமன்ன னிருபாதம்தெண்டனிட்டு
தெண்டனிட்டதன்மகனைத் தீவிரமாய்த்தானெடுத்து
பாலனெங்கேயென்று பரிவுடனேதான்கேட்டாள்
இட்டுவருகிறே னென்தாயேமாதாவே
வந்தான்கடோற்கஜனும் வாளபிமன்தன்னுடனே
அம்மாளழைத்து ஆதரவாய்ச்சொன்னதுவும்
அன்னனேவிட்டு அபிமன்னனேக்காட்டுமென்றாள்
இட்டுவாவென்றுசொல்லி யென்னையனுப்பினதும்
பாலனுக்குச்சொல்லிப்போ பட்சமுடனுரைத்தான்
நல்லதுஎன்றுசொல்லி நடந்தாரிருவருமாய்
[illegible]

அம்மாளைச்சுற்றிவந்து அடிவணங்கித்தெண்டனிட்டான்
தெண்டனிட்டபிள்ளையைத்தான் தீவிரமாயத்தானெடுத்து
பாலனபிமன்னனைத்தான் பட்சமுடன்தானெடுத்து
மகனேமகனேயென்று வாய்திறந்துமுத்தமிட்டாள்
உச்சிமுகந்து உடம்பெல்லாந்தான்தடவி
வல்லரக்கன்காட்டு வழியாகவுன்வந்தாய்
அந்த அரக்கன்மெத்த ஆகாதபாவியடா
பொல்லாதராட்சதனைப் போராடிக்கொன்றாயே
ஐயோமகனே அவன்கொன்றாலேதுசெய்வேன்
தாரார்புகழ்வேந்தன் தர்மருக்கென்னசொல்வேன்
வீரதிவீரன் வீமருக்கேதுசொல்வோம்
ஆணழகுமன்னர் அர்ச்சுனருக்கேதுசொம்வோம்
நாமக்கொடிவேந்த னகுலருக்கேதுகோல்வோம்
சாத்திரத்திலிருந்த சகாதேவர்க்கேதுசெல்வோம்
தோராவடிவழகி துரௌபதைக்கேதுசொல்வோம்
என்றுகமலகன்னி யிருந்தாளப்பொழுது
கண்டானபிமன்னன் கமலகன்னிமாதாவை
கொண்டாடிக்கொண்டாடிக்குறைகளெல்லாந்தான்தெளிந்தான்
அபிமனைத்தான்பார்த்து ஆயிகமலகன்னி
எங்குவந்தாயென்மகனே யிந்தஅடவியிலே
வந்தவகையென்னுடனே வகையாயுரையுமென்றாள்
சொல்லுகிறேன்தாயாரே துரிதமாய்வந்ததெல்லாம்
மாயன்பெருமாள் மகளானசுந்தரிக்கு
பங்கமறச்சண்டாளப் பாவிதுரியோதனன்
எனக்கென்றிருந்தபெண்ணை யெடுத்தலெக்குணற்கு
கொடுக்கவிசைந்தானும் குருடனிடபேரனுக்கு
நாளைக்குக்கலியாணம் நல்முகூர்த்தமிட்டு
பகல்முகூர்த்தமென்றுசொல்லிப் பாக்கும்பகுந்தார்கள்
அந்தவிசேட மதுகேட்டுச்சுந்தரியும்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்திற்போய்விழுவேன்
அத்தைமகன்வராவிட்டா லலைந்துவிழுவேனென்
வாளாலபிமன்னன் மணவாளனென்றுசொல்லி
வளர்த்தசரீரத்தை மண்ணுக்கிரைசெய்வேன்
வந்தாலபிமன்னரும் மத்தியானத்துக்குள்ளாக
என்றும்பிழைப்பேனே னபிமன்னுவென்றுசொல்லி
எந்தனுக்கோலை யெழுதிவரவிட்டாள்காண்
சிந்தையொடுபார்த்துச் சிவசிவாவென்றுசொல்லி
எந்தனைத்தானனுப்ப விணங்காமல்தானிருந்தாள்
அந்தமனதை யறிந்தேனடியேனும்
மனதிருக்கமாட்டாதே வந்தேனடவியிலே
வழியுந்தெரியாதே வல்லரக்கனவனத்தில்ன

வந்துநிலைகுத்து வழியறியமாட்டாதே
பயந்துநடுங்கியந்தப் பாறைமேல்நான்படுத்தேன்
அப்போதுவல்லரக்க னடித்துவிழுங்கவந்தான்
இந்திரனைத்தோத்தரித் தெங்களப்பா ஆயுதத்தை
தாவென்றுவாங்கியம்மா சண்டைபண்ணியேஜெயித்தேன்
பின்னையுமுண்டான பேச்சுவகையுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறையாம லுரைத்தானபிமராசர்
தாயார்கமலகன்னி சந்தோஷந்தானாகி
அபிமன்னனைக்கட்டி யணைத்துமுத்தந்தானுமிட்டாள்
ஆனைலழகுமன்னன் அருச்சுனனார்தன்தேவி
நாககன்னிபுத்திர னல்லரவானென்றொருவன்
உந்தனுக்குத்தம்பி யுடற்பிறப்புநல்லரவான்
பாலனுக்குநேர்மூத்தோன் பட்சமுள்ள அண்ணனவன்
அவனுடனேமூவரும்போய் ஆயர்மனைபுகுந்து
தம்பியபிமன்னனைத் தலைமறவாயங்கேவைத்து
நீங்களிருவருமே நீறுபொடியுமாக்கி
சுந்தரியைத்தாலிகட்டிச சுகமாகவாருமென்று
நாககன்னிசொற்படியே நடவுங்கள்பிள்ளைகளே
என்றுகமலகன்னி யெடுத்துரைத்தாள்வாசகங்கள்
நல்லதெனச்சொல்லித் தாயாருக்குத்தெண்டனிட்டார்
தெண்டனிட்டபிள்ளைகளைச் சீராகத்தானெடுத்து
எங்குவந்தாயென்மகனே யிந்தஅடவியிலே
வாழ்த்திவிடைகொடுத்து மாதாவுமனுப்பினாள்

கடோற்கஜனும் அபிமன்னனும் கமலகன்னியினண்டை
விடைபெற்றுக்கொண்டுவருகிறது.

கடோற்கஜனும்பாலனுமே கடுகநடக்கலுற்றார்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுகடந்து அரியசுனைதான்கடந்து
நாடுகடந்து நல்லமலைதான்கடந்து
இருசிவனங்கடந்து எனுமிச்சையுட்புகுந்தார்
அருச்சுனபுரத்துக் கவர்வழியைக்கேட்டுவந்தார்
வாரவரும்போனவரும் மட்டிடப்போகாது
கலியாணத்துக்குப்போனவரை கணக்கிடப்போகாது
குறுகிவந்தார்கள் கனமானராசாக்கள்
அங்கேரண்டுமலைக ளாகாயமளாவிநிற்கும்
வல்லரக்கன்போல மதவிமன்றண்டதுபோல்
வானத்தைதழுவி வளர்ந்திருப்பானல்லரவான்
ஒருமலைமேல்சாய்ந்துகொண்டு ஒருமலைமேல்கால்நீட்டி
இப்படியேபசியிருக்கா னிடும்பனரவானும்
அந்தவிருவருமே மலைமறைவில்நின்றார்கள்
தேசத்திலுள்ளவர்கள் துரியோதனன்கூட்டமெல்லாம்

இருபர்கிருபாசாரி கீர்த்தியுள்ளவீட்டுமரும்
தோராதஅசுவத்தாமன் துரோமன்னரெல்லவரும்
பதினெண்படைத்தலைவர் படைமன்னரெல்லவரும்
எத்திசையுந்தானும் இயலானராசாக்கள்
சட்டைகழட்டாத தார்வேந்தரெல்லவரும்
போட்டசட்டைவாங்காத யோர்மன்னரொருகோடி
காமமுடிமன்னரெல்லாம் நடந்தார்கள்கால்கீழே
கர்ணன்விகர்ணன் காங்கேயன்தேத்தரசன்
மன்னர்குருக்களும் மகாசேனையுள்ளதெல்லாம்
நல்லரவான்கால்கீழே நடந்தாரனேவோரும்
மலையடியண்டையிலே மன்னரிருவோரும்
நின்றுமேதாம்பார்த்தார் நீட்டினகால்வாங்கான்
நல்லரவானண்டையிலே ஞாயமாய்நின்றுகொண்டு

அரவானோடு கடோற்கஜனு மபிமன்னனும் யுத்தஞ்செய்தல்,

ஆரடாராட்சதனே யப்பாலேகால்வாங்கும்
பாரடாவெங்களுக்குப் பயணமது துரிதமென்றார்
பார்த்தானேநல்லரவான் பசகளிடவார்த்தைதன்னை
இப்பெரியசேனையிலு மிவர்கள்மெத்தசேவகரோ
ஆனைகுதிரையில்லை அரசமன்னர்தானுமில்லை
காலாளர்வந்திருவர் கால்வாங்குமென்றார்கள்
இவர்கள்சவுரியத்தை இப்போதறிவமென்று
போங்களடாகால்கீழே போகவழியில்லையடா
நோக்கமுடன்வந்தீரோ நுழையவழியில்லையோ
போக்கற்றுவந்தீர்களோ போகத்தெரியாதோ
கால்வாங்கச்சொன்னதென்ன கனமானமன்னவரே
அப்பாலேபோங்களடா அடிபடப்போறீர்கள்
துரைமன்னராசாக்கள் சுகமாய்நுழைந்தார்கள்
மானிடத்தோலோடே மனிதர்நுழைந்தார்கள்
நீங்கள்-வீணுக்குவந்தீர்கள் வெட்கங்கெட்டுப்போனீர்கள்
சும்மாய்நுழையுங்கள் சுறுக்காகமன்னவரே
என்றுசொல்லநல்லரவா னெடுத்துரைத்தானிப்பொழுது
அவ்விசேடங்கேட்டு அபிமன்னராசாவும்
கோபித்துக்கண்சிவந்தே கோவைப்பழம்போலே
தெண்டைச்சுழற்றித் திருப்பிவிட்டான்கால்மூறிய
ஏதடாவிங்கே யெறும்புகடித்ததென்றான்
குதித்துக்கதும்பியவன் கோடையிடிபோல்நகைத்து
கண்கள்சிவந்து கடுங்கோபமாகியுமே
வில்லைவளைத்தம்பு தொடுத்துவிட்டானரவானும்
கடோற்கஜன்தண்டைக் கையிலேதடுத்துவிட்டான்
ஐந்நூறுபாண மனல்பாணம்விட்டானே
பாலனதுகண்டு வானாலேதடுத்துவிட்டான்
ஒருவர்க்கொருவர்சண்டை யுக்கிரமானகோபமொடு

அட்டதிக்குப்பாலகர்க ளதிர்ந்துநடுங்கிடவே
சந்திரருஞ்சூரியருந் தானோடிப்போனார்கள்
தேவேந்திரனுந் திகைத்துமிகப்பார்க்க
இப்படியாக யிணைபிரியாச்சண்டைபண்ணி
கண்கள்சிவக்கிறதும் கடுங்கோபமாகிறதும்
மீசைதுடிக்கிறதும் வெகுகோபமாகிறதும்
பிடியம்புதான்தொடுத்து விட்டானரவானும்
கடோற்கஜனுந்தெண்டாலே கடிகித்தடுத்துவிட்டான்
சரமாரிதான்பொழிந்தான் சமர்த்தானபிமராஜன்
பாணமும்பாணமும் பரவிப்போர்செய்யுதங்கே
ஒருவர்க்குந்தாங்காம லோடியேபோகுதுகாண்
பாணப்புகையிலே மடியுதேபட்சிகளும்
பார்த்தானேகல்லரவான் பசங்களிடசத்துவத்தை
ஆரோதெரியா தறிந்திடுவோமென்றுசொல்லி
கேட்டானேகல்லரவான் கிளிப்பவளவாயாலே
தம்பிசிறுவரே சவுரியத்தில்வல்லவரே
உங்களிடவங்கிஷத்தை யுரையிரெனக்கொன்றான்
பகிகாத்திலெப்பாரி கேட்பாரோபார்வேந்தா
உன்றனேயான யுத்தமேசெய்யுமென்றான்
ஆனால்கேள்தம்பியரே கானதைச்சொல்லுகிறேன்
கேளுங்கள்தம்பியரே கெலிப்பாகச்சொல்லுகிறேன்
என்தகப்பனருச்சுனன்று னென்பேருநகல்லரவான்
என்தாயார்போர்நாககன்னி தாபரிடவங்கிஷங்காண்
இப்படியால்லியெடுத்துரைத்தானல்லரவான்
அந்தவிசேஷமடைவாகக்கேட்டிடுவோம்
எங்களிடவங்கிஷத்தைக் கேளுங்காணண்ணாவே
என்தகப்பன்வீமசேனன் என்பேர்கடோற்கஜனும்
தாயார்கமலகன்னி தர்மரிடவங்கிஷங்காண்
தம்பியபிமன்னன் தனஞ்செயனார்பிள்ளையடா
அருச்சுனனார்பெற்றெடுத்த அபிமன்னனிவன்தாண்டா
சுபத்திரையாள்பெற்றெடுத்த துய்யநற்பாலனிவன்
இப்படியாகச்சொல்லி யிருவருரைக்கலுற்றான்

கல்லரவானும் கடோற்கஜனும் அபிமன்னனும் சமாதானம்

உண்மைகளைச்சொல்லி உறவுகொண்டாடினபின்
எடுத்தவில்போட்டரவா னின்பமுடனோடிவந்து
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
அண்ணனையுந்தம்பியு மரவானெடுத்தணைத்து
தாழவுட்கார்ந்து தம்பியைமடிமேல்வைத்து
கேட்டானேகல்லரவான் கிளிப்பவளவாயாலே
அப்பாஅபிமன்னா அருச்சுனனார்புத்திரனே
எங்குவந்தாய்தம்பியரே யெனக்கறியச்சொல்லுமென்றான்

அண்ணகடோற்கசரே யறியவேசொல்லுமென்றான்
அவ்விசேஷங்கேட்டு அபிமன்னரசாவும்
சுந்தரியையெந்தனுக்குச் சொல்லியிருக்காரே
பெண்சாதியென்றுசொல்லிப் பெரியோர்முன்னாலிலே
அந்தநாளே முதலா யமர்ந்திருந்தகாரியத்தை
தள்ளிக்கிரிபோதனன் தமையன் ஏக்குணமற்று
செல்வக்கவியாணத்தை செய்யவேயுன்னாரும்
அந்தவிசேடமது கேட்டாளே சுந்தரியும்
எந்தனுக்கோலை எழுதிவரவிட்டாள்காண்
பின்னேயுமுன்னான பேச்சுகளையுள்ளமெல்லாம்
நன்றாயெழுதி யனுப்பினாள்நாயகியும்
அதுகண்டுஅண்ணாவேயடியேன்புறப்பட்டேன்
மனம்பொறுக்கமாட்டாமல் வந்தேன்காணண்ணாவே
வல்லரக்கன் தன்வனத்தில் வழிகப்பிவந்துவிட்டேன்
கொல்லத்துணிந்தானே கொடும்பாவிவல்லரக்கன்
வல்லரக்கனவனுடனே வருத்தமாய்ச்சண்டைபண்ணி
கொன்றேனவனைக் கொடுமையுள்ளராட்சதனை
அவ்விசேடங்கேட்டு தாண்ணன்கடோற்கஜனும்
என்னையறியாமலென்மேலேசண்டைசெய்தார்
அன்னாளும்நானுமாய் ஐந்தாறுநாளிமட்டாய்
சண்டைகள்பண்ணிமெத்தக் கண்டோர் மலைவில்லாமல்
வங்கிஷங்கள்பேசி யறிந்தோங்காணண்ணாவே
பின்னேயுமெத்தப் பேச்சுவகையுள்ளமெல்லாம்
ஒன்றுங்குறையாமல் உரைத்தானேபாலனுமே
அம்மாள்கமலகன்னி அனுப்பிவிட்டபூஷணமும்
அண்ணனையுங்கூட்டி அனுப்பிவைத்த உண்மைகளும்
உன்னுடனேபேசி உங்களம்மாள்நாககன்னி
தன்னுடனேயிதையெல்லாம் தப்பாமல்சாலவுரைத்து
உன்னுடனேமூவரும்போய் உறுதியுடன்சண்டைபண்ணி
சுந்தரியைத்தாலிகட்டிச் சுகமாகவாருமென்று
அனுப்பினாள்கமலகன்னி அண்ணாவேயிங்குவந்தோம்
என்றுசொல்லிப்பாலனுமே எடுத்துரைத்தான்உள்ளதெல்லாம்
நல்லதென்றுதான்கேட்டு நல்லரவானப்பொழுது
சந்தோஷப்பட்டுத் தலையசைத்துக்கொண்டானும்
நல்லதென்றுமூவருமாய் நடந்தார்களப்பொழுது
தாயிருக்கும்பாதாள லோகத்திடமறிந்து
நாககன்னிபக்கலுக்கு நடந்தார்கள்மூவருமாய்
அம்மாள் இருக்குமந்த ஆசாரச்சாவடியில்
கண்டார்கள்தாயாரைக் கைகுவித்துதெண்டனிட்டார்
பிள்ளைகளைவாழ்த்திப் பெருமையுடன்தாளெடுத்து
ஏகடாநல்லரவான் இவர்கள்யாரிடவங்கிஷங்காண்
சொல்லடாவென்று செவிகொடுத்துத்தான்கேட்டாள்

நல்லரவான் அபிமன்னன்சேதியைத் தாயாருக்குக் கூறுதல்

வெற்றிமதயானை வீமகுமாரனம்மா
நாயார்கமலக்கன்னி தன்மகன்கடோற்கஜன்தான்
ஆறுவைநருமன்னன் அருச்சுனனார்பெற்றபிள்ளை
உந்தன்புருஷனுக்கு உற்றகுமாரனம்மா
அபக்கனைக்குப்பிள்ளையம்மா சுந்தரிக்குமாப்பிள்ளைகாண்
சுந்தரியைத்தாலி கட்டவந்தான் அபிமனுமே
என்றுசொல்லிநல்லரவான் எடுத்துரைத்தானப்பொழுது
காரியமாய்வந்த கபிமானப்பேச்சையெல்லாம்
பூரணமாய்ச்சொல்லியப்போ போற்றநல்லரவான்

நாககன்னிகூறுவது

அந்தவசனங்கேட்டு அம்மாள்எரிபறந்து
கோபித்துக்கண்சிவந்து கூறியவாளெடுத்து
துரியோதனன்சேனை தேசத்திலுள்ளதெல்லாம்
அதிரவெட்டி ஆகாயம்போக்கிடுவேன்
என்றுசொல்லிச்சபதமிட்டு எழுந்தாளேநாககன்னி
கண்டானேநல்லரவான் காலிலேபோய்விழுந்து

நல்லரவான் கூறுவது

நானிருக்கநீபோக ஞாயமோதாயாரே
இமைப்பொழுதில் துரியோதனன்சேனையெல்லாம்
[illegible] அடிபணிகொண்டிடுவேன்
வெட்டியடித்துமேலோகம்போக்கிடுவேன்
தாக்கியடித்தவனைச் சுந்தரிக்குமாலையிட்டு
தம்பிகையில்மங்கிலியம் தரிப்பித்துநான்வாரேன்
எனக்குவிடைகொடம்மா என்தம்பிதன்னுடனே
என்றுசொல்லிநல்லரவான் எடுத்துரைத்தான்தாயாருக்கு
தாயார்மனங்குளிர்ந்து சம்மதித்தாளப்பொழுது
கோபந்தணிந்தபின்பு கொம்பனையாளேதுரைப்பாள்
அரவான்கடோற்கஜனும் அவர்முகத்தைத்தான்பார்த்து
என்பிள்ளைப்பாலனைத்தான் இங்கேயிருக்கவைத்து
அங்கேயிருவரும்போய் அர்ச்சுனைபுரம்புகுந்து
பங்கப்படவடித்துப் பதராக்கித்தூற்றிவிட்டு
துவாரகாபுரியைப்பிசகச் சுட்டுத்தணலாக்கி
சுந்தரியைப்பல்லக்கில் சுகமாயெடுத்துவந்து
என்முன்னேதான்விடுங்கள் எதிரில்லாமக்களேநீர்
என்றுசொல்லியப்போது எடுத்துரைத்தாள்நாககன்னி
தம்பியிருவருஞ் சாஷ்டாங்கதெண்டனிட்டு
உத்தமியேயென்தாயே ஒருவார்த்தைசொல்லுகிறோம்
தம்பியையிங்கேவைத்துத் தாரமேகொண்டுவாறோம்
சுந்தரியைக்கொண்டுவந்தால் சூதாயிருக்குமம்மா
தாவிலேகொண்டுவந்தால் கள்ளனென்றுசொல்வார்கள்
பந்தலிலேதானிருந்து பார்த்திருக்கத்தாலிகட்டி

விந்தையுடன்மன்னவர்கள் வெட்டித்தலைசாய்த்திருந்த
மங்கலியம்தரித்து வரவேணும்தாயாரே
என்றுசொல்லஅரவான் இதமாயெடுத்துரைத்தான்
அவ்விசேடங்கேட்டு அதுகேட்டுநாககன்னி
நல்லதப்பா என்மகனே நாயகமே நீர்கேளும்
தம்பி அபிமன்னனைச் சண்டையிலேவொட்டாமல்
இராசமுடிமன்னவனை இரணமுகத்தில்காட்டாமல்
மறைவாகத்தான்வைத்துமகாசண்டைநீங்கள் பண்ணி
தண்டெழுந்து தளங்கள்கழிந்தபின்பு
சுந்தரிக்குமங்கிலியஞ் சுகமாய்த்தரியுங்கள்
என்று-பெட்டியைத்தான்திறந்து புலியாணைப்பொட்டெடுத்து
திட்டமுடன்மங்கிலியம் திரள்பூஷணமுள்ளதெல்லாம்
பட்டுரவிக்கைகளும் பருமுத்துத்தாழ்வடமும்
கட்டித்தலைநிரப்பி சுந்தரிக்கு ஆனதெல்லாம்
திட்டமுடன்பெட்டிகட்டிச் சீராகத்தான்கொடுத்தான்
சொன்னபடிசெய்யுமென்று சொல்லிவிடைகொடுத்தான்
அப்படியேநல்லதென்று அனுப்பினைக்குக்கொண்டார்கள்
அம்மானைச்சுற்றிவந்து அடிவணங்கித்தெண்டனிட்டு
தெண்டனிட்ட மக்கள்தனைச் சீராகத்தானெடுத்து
வாழ்த்திமனமகிழ்ந்து மாதாவும்அப்போது
வேலனைத்தோத்தரித்து மாதாவும்அப்பொழுது
போய்வாருமென்றுசொல்லிப் போனார்கள்சூலருமாய்
வாசல்கடந்து மண்டபங்கள்தான்கடந்து
நாடுகடந்து நகரியெல்லாந்தான்கடந்து
சாத்திரக்கொடிவேந்தன் சகாதேவன்தன்மகனும்
தொங்கிசெட்டிவீற்றிருக்குந் துய்யமலைவந்தார்கள்
அந்தவனத்தில் அழகானதொங்கிசெட்டி
உயர்ந்தமலைமீதிருந்து ஒருகையில்தராசுகொண்டு
மற்றொருகையிலே மலைபிடுங்கிகுண்டாக்கி
வருவாரைப்போவாரை மறித்துத்தராசில்வைத்து
நிறுத்துநிறைக்கொரு நின்னயப்பொன்வாங்கி
வாங்கியேபொன்னையெல்லாம் மலைபோலேதான்குவித்து
இன்னம்வருவார்க்கு எதிர்பார்த்து அங்கிருந்தான்
அரவான்கடோற்கஜனும் அபிமனும் அங்குவந்து
சகாதேவன்மகனார் சாத்திரவான்தொங்கிசெட்டி
வருகிறபேர்களைத்தான் வங்கிஷமொன்றறியாமல்

தொங்கிசெட்டி யுத்தம்

கண்டந்தமூவரையும் கானகத்தொங்கிசெட்டி
கைவீங்கக்காசு கடுகெனவேதாருமென்றான்
காளையரவானும் கடோற்கஜனுமேதுரைப்பார்
ஆரடாபயலே ஆகடியம்பேசுகிறாய்
வழியில்தராசுகளை வாங்கடா நாங்கள்போக

பாரடாவையிலே பவனம்துரிதமடா
தாரசுரனைவாங்கடா சனதியிலேபோகவேணும்
கேட்டந்ததொந்திசெட்டி இளிப்பவளவாயாலே
ஆரடாபானிட்டே அடிபடப்போகிறீர்கள்
துரியோதனனுடைய சேனைப்பரிகலமும்
பதினொண்படைத்தலைவர் பாங்காயிருந்தேனே
அவர்களிலும்பெரியவரோ ஆண்மையுள்ளவீரியரோ
அரவான்கடோர்க்கஜனு அபிமன்னுராஜாவும்
சீறியெறிபறந்தார் சிங்ககுட்டிபாய்ந்ததுபோல்
அதுகண்டுதொந்திசெட்டி அவனும்மெழுந்திருந்தான்
மூவருடன்போர்பொருத மூடுகிறான்தொந்திசெட்டி
அபிமன்னராஜாவை அடர்த்திருவருநதான்
தெண்டேனைவில்லுகளும் தீவிரமாய்தானெடுத்து
தொந்திசெட்டிமேலே தொடுத்தார்கள்பாணசரம்
அவனுடனெதிர்த்து அப்போ ஆயுதத்தைதானெடுத்து
மூவருடனே அவன் மூண்டு அப்போசண்டைபண்ணி
பாணங்கள் அப்பொழுது மழைமாரிபோல்பொழிய
பூமிதிதிடென்ன பூலோகந்தானதிர
எதிரானதன்மலையை யிருபிளவாய்தான்பிளக்க
இப்படியாகவிவர்கள் சண்டைபண்ணுகையில்
பாணங்கள்வாரதெல்லாம்பலமாகசுற்றிவந்து
பாதத்தில்தான்பணிந்து பக்கத்தில்கின்றிடுமாம்
இப்படியாக இருசாமஞ்சண்டைபண்ணி
பாணங்கள்வாரதெல்லாம் பலமாகசுற்றிவந்து
பாதத்தில்தான்பணிந்துபக்கத்தில்நின்றிடுமாம்
இப்படியாக இருசாமஞ்சண்டைபண்ணி
ஒருவர்க்கொருவர்க்குக்காயம் உருதியுடன்பட்டதில்லை
இந்தப்புதுமையேதென்று தொந்திசெட்டி
கும்பிடவெடுத்து ராஜமன்னர்தானிவரோ
அதிக்கிடுவோமென்றுசொல்லி அணழகன்தொந்திசெட்டி
மன்னவரோராசரேசீர் வழிபட்டுமூவருந்தான்
உருடையனக்கிஷெங்காண் அறியவுரையுமென்றான்
அப்படியேசொல்லுமென்று அங்கிருந்தமூவருந்தான்
பதிலைந்தில்ஒப்பாரி கேட்பாரோபார்வேந்தர்
சண்டைமுனையிலே தாவுதரிகேட்பாரோ
சந்திமுனையிலே கணவுறவுகேட்பாரோ
என்று அரவான் யிலிப்பாணவார்த்தைசொன்னான்
சொன்னவிசேடமது தொந்திசெட்டிதான்கேட்டு
சுபவனாயுந்தான்பார்த்து முடிமன்னனைதானுணைப்பான்
சிங்களுடையாமல்கின்னையமாய்தானிருந்தி
ரான்திறப்போசொல்லி எடுத்துனாப்பேண்சீர்சேனும்
பாண்டுமகாராசன்குலம் பாண்டவர்ஜவர்களில்

செம்பணிதிப்பட்டுத் திரளாய் அவள்கொடுத்தாள்
அண்ணன் அவர்களையும் அனுப்பிவிடை கொடுத்தாள்
மூவருமாய்க்கூடி மூணுந்துவரந்தோமிப்பொழுது
என்றுசொல்லக்கேட்டு எழுந்திருந்துதொந்திசெட்டி
வாருங்கோளென்றுசொல்லி மாதா அரண்மனைக்கு
அழைத்துவந்துவிட்டு அம்மானுந்தென்னைவிட்டு
மூவாளுந்தமேதியெல்லாம் முடியஅனுகொத்தான்
கொட்டிவிற்றிருந்தான் காவலர்கள் தங்களுடன்
மக்களைப்பார்த்துமப்போ மனமகிழ்ந்துவீரகெங்காள்
வாழ்த்தியெடுத்து மடிமேலேதானிருத்தி
உச்சிவைத்தான்முகந்து உவமைசொல்லிமுத்தமிட்டு
தாதிகளைத்தானழைத்து சமையலதுபண்ணிவைத்து
பயிர்கோதியென்னெயிட்டு வரிசையுள்ளமக்களுக்கு
நல்லமூகருபன்னுவித்துச் சாப்பாடுதானுமிட்டு
அடைக்காய்ச்சுருள்கொடுத்து ஆபரணந்தானெடுத்து
பிள்ளைகள் தங்களுக்கும் பெரும்பணிதான்பூட்டி
மக்களுக்குஏற்றதொரு வரிசைப்பணிபூட்டி
ஆபரணம்பூட்டி அழகாய்ப்பணிபூட்டி
அபிமன்னராசனுக்கு அதிகப்பணிபூட்டி
பட்டும்பலகனியும் பாலனுக்குத்தான்கொடுத்து
அரவான்கடோற்கஜனை அவள்மகளைத்தானழைத்து
சுந்தரிக்குமாலையிடச் சுகமாகநீங்களும்போய்
அறியாதபாலகனை அபிமன்னராசாவை
துரியோதனனுடைய திரள்தனையேகாட்டாதீர்
ஆனைபடைசேனைகள் அவன்கண்ணில்காட்டாதீர்
பாலன் அபிமனும் படைமுகங்கள்பார்த்தறியான்
தூரங்குடித்தறியான் சண்டைசெய்துதானறியான்
அபிமன்னராசாவை அப்பால்நிறுத்திவைத்து
துரியோதனன்சேனையெல்லாம் செண்டாடித்தான்செயித்து
மாற்றான்பகையாளி மாபாவிசத்துருக்கள்
அவன்-ஆனைகுதிரைகளை அவனியிலேமடியவைத்து
மாயன்மகள்சுந்தரியை மணஞ்செய்துவாருமென்று
பூபிளைக்கிள்ளி பொருந்தவேகாப்புமிட்டு
வாளாபிமன்தன்னையே மகன்கையிலொப்புவித்து
போய்வாருமென்று பிள்ளைகட்குவிடைகொடுத்தாள்
அங்கேவிடைகள்பெற்று அலைகங்கைதன்னோடே

நால்வரும் துவாரகாபுரிக்கு வருவது

அப்போதுநால்வருமாய் ஆயன்பதிநோக்கி
இரவுபகலாக இராசாக்கள்தான்கடந்து
காடுகடந்து கடியவனந்தான்கடந்து
காவுந்தோப்புகளுங் கடந்துவழிகடந்து

இஞ்சிவனங்கடந்து இருளாட்சியுட்புகுந்து
கொஞ்சிவனங்கடந்து கிழவிவனம்புகுந்தார்

நால்வரும் ஔவையார் வீட்டில்வந்து இறங்கினது

ஔவையார்தன்வனத்தில் அரசமக்கள்போய்ப்புகுந்தார்
தாரார்தனஞ்செயனார் தருமரிடசத்திரமாம
ஏராளமாக எத்தனைபேர்வந்தாலும்
நாழியரிசி சமைத்திடுவாள்நாயகியும்
அப்படிக்கொத்தஔவையார்தன்மாளிகையில்
போனார்கள்நால்வருந்தான் புதுமையுள்ளராசாக்கள்
கண்டாளேஔவையாரும் காரணமாய்வந்தவரை
வந்தவரைக்கண்டவளும் வாங்களிருங்களென்றாள்
எந்தவூரெந்ததேசம் எனக்கரியக்கூறுமென்றாள்
அப்பொழுதுநால்வரும் அறியவுரைப்பார்கள்
காசிவளநாடு கலியாணம்பார்க்கவந்தோம்
இந்தவனத்திலே யிருப்பானேன்பாட்டியரே
மெத்தப்பசிக்குதம்மா வெம்பிவிடாய்த்துவந்தேன்
பாட்டிக்கிழவியரே பழஞ்சோறுமுண்டோதான்
நல்லகிழவியரே நாணயக்காரியரே
பசிக்குதுஔவையாரே பாலமிர்தம்வேணுமென்றார்
பழஞ்சோறேன்பிள்ளைகளே பரமர்கிருபையினால்
நாலாயிரம்பொன்னீய்ந்தால் நற்போஜனமிடுவேன்
இன்றொருவரில்லாமல் எதிர்பார்த்துநிற்கும்போது
நீங்களும்வந்தீரே நீலவர்ணன்புண்ணியத்தால்
சமைக்கஒருநாழிசெல்லும் தம்பியரேயென்றுரைத்தாள்
சுந்தரிக்குப்பூமாலை தொடுத்துவைத்தபிற்பாடு
அப்போசமைத்திடுவேன் என்றாளேஔவையாரும்
அந்தவிசேஷம் அதுகேட்டுப்பாலனுமே
சுந்தரிக்குப்பூமாலை தொடுத்துவருகிறேனென்
எங்களுக்குநீசமைத்து இடுங்காணும்பாட்டியரே

ஔவையார் அபிமன்னனுக்குப் புட்பங்கொடுப்பது

அப்படியேநல்லதென்று ஔவையாருஞ்சம்மதித்து
மல்லிகைமுல்லை மருக்கொழுந்துசெண்பகமும்
சொற்பெரியகுங்குமப்பூ சூரியகாந்திப்பூவும்
நன்றாய்ப்பரிமளிக்கும் நந்தியாவர்க்கமுந்தான்
பாதிரிப்பூச்செவ்வலரி பாரிசாதபுட்பங்களும்
எந்தெந்தபுட்பமெல்லாம் எடுத்துவந்துதான்கொடுத்தாள்

அபிமன்னன் சுந்தரிக்குப் பூமாலைதொடுப்பது

பார்த்தான்அபிமன்னன் பாட்டிதந்தபூவையெல்லாம்
வகையாவொருசெண்டுகளும் மாலைகளுங்கட்டலுற்றான்
பொன்னிழைந்தநாராலே பூச்செண்டுகட்டலுற்றான்
ஐந்நூற்றுநாலுவகை ஆனசெண்டுமாலைகளும்
கிகிகென்றுதான்பின்ன நிதானமிட்டுக்கட்டினான்

மல்லிகைபூச்செண்டதிலே தான்வந்தவையணையெல்லாம்
சொல்லியொருசீட்டிலே சுருக்காகத்தானெழுதி
கணையாழிமோதிரத்தைக் கழட்டியதற்குள்ளேவைத்து
பூமாலைதான்கழட்டிப் பூப்பெட்டியுள்ளேவைத்து
ஔவையாரைத்தானழைத்து ஆச்சுதுமாலையென்றான்
பசிக்குதுபாட்டியாரே பசியாறவேணுமென்றான்
அப்படியேயாகுதென்று அவ்வையாருஞ்சம்மதித்தாள்
முழுகிகுளித்து முகங்கழுவிப்பூசைபண்ணி
எழுந்திருக்கவென்று மனங்குளிரச்சொன்னாளே
ஆசனம்பொருந்துமென்று ஔவையாரழைக்கலுற்றாள்
சாணுக்குமூன்றடிதான் தள்ளாடிதானடந்தாள்
ஆசட்டுக்கிழவியவள் ஆசனமெங்கேபோடுவாள்
மாற்றான்துரியோதனன்தான் வைத்தாரோநாமறியோம்
(என்று) எண்ணிமிக்கநால்வருமாய் ஏகாந்தம்பேசிருந்தார்
மாற்றான்பகையாளி மாபாவிமைந்தனவன்
தேசத்தழுகன் துரியோதனன்பாவி
அண்ணையன் செய்தவினையறியீரோ அண்ணாவே
நச்சுமுள்ளைத்தான்பரப்பி நடக்கும்வழிதனிலே
கொல்லத்துணிந்தானே குருடன்மகனாரும்
அய்யனாரோமேலே அன்றழைத்துவந்தார்
பஞ்சவரைவரையும் பட்சமாய்த்தானழைத்து
அரக்குமாளிகையினில் அனலடைத்துத்தீக்கொளித்தி
மடிக்கநினைத்தானே மாபாவிசத்துருக்கன்
அன்றழைத்தார்களாயன்திருவுளத்தால்
கானபிமருடன் கடோர்க்கஜனைதுரைப்பான்
நல்லதுதம்பியரே நட்பேவௌவையாரை
ஆக்கினைசாதம அடைவானகாய்கறிகள்
கொண்டுவந்துவட்டியுங் கிழவியெனவுரைப்போம்
பாட்டிஒருகூடருண்டை இன்னுமென்றுகைகொடுப்போம்
மருந்தானால்தின்னாள் மயங்குவாள்கூன்கிழவி
மறுசோற்றுக்கா வாரிவிழுங்கிடுவாள்
தின்றதேபோனால் தெண்டால்நூறுங்கடிப்போம்
என்று-எண்ணிமிக்கநால்வருமாய் ஏகாந்தம்பேசியபின்
ஔவையார்வாசலிலே அரசமக்கள்வந்துநின்று
பாட்டியரைத்தான்பார்த்து பசிக்குதுவென்றுரைத்தார்

ஔவையார்கால்வரையும் இலைபரிக்கச்சொன்னது

அப்போதுஔவையார் அரசமக்கள்தனைப்பார்த்து
வாழையிலைபோட்டு மறித்தெடுப்பாராருமில்லை
இருநூற்றுக்காதவழி எல்லையுள்ளதூரமெல்லாம்
ஒருசுரைமூற்றிலெங்கும் ஓங்கிவளர்ந்ததுகாண்
அரவானைப்பார்த்தங்க ஔவையார்கிழவிசொல்வாள்
நாலுஇலைகிள்ளிநால்வரும் வாங்கவென்றாள்

சுருக்கானவையிலே சுனைகிள்ளிவாருமென்றாள்
அரவான் சுரைஇலையை வேரோடு பிடிங்கினது
என்னக்கிழவியரும் எழுந்திருந்துநல்லரவான்
இருநூற்றுக்காதவழி படர்ந்தசுரையுள்ளதெல்லாம்
அப்போஅரவானும் அடியோடேதான்பிடுங்கி
வேரோடேதான்பிடுங்கி வேர்தன்மலைபோல்சுருட்டி
வைத்துத்தலைமேலெடுத்து வாரானேநல்லரவான்
சுருட்டிவருந்தம்பிதனை துரைமன்னர்தான்பார்த்து
சீதைசிறையிருக்க ஸ்ரீராமர்படைகூட்டி
இலங்கைபுகுந்து இராமர்படைவெல்லும்போது
மாற்றான்கையம்பாலேவானவர்கள்மடிந்தார்கள்
அப்போதனுமார்அமிழ்தத்தைக்கொண்டுவர
சஞ்சீவிகொண்டுவரத் தாண்டியேபோம்பொழுது
மருந்துடையபேர்மறந்து மலையோடுபிடுங்கிவந்தான்
இமயமலையிலே இருக்குதென்றுசஞ்சீவி
அனுமார்மலைபிடுங்கி அன்றெடுத்துவந்தாற்போல்
அரவான்சுரைபிடுங்கி ஔவையார்முன்போட்டான்
கிழவிவிசனப்படுவது
கண்டாளேஔவையாரும் கைநெரிததுக்காலரைத்து
அண்டாதராட்சதனே அடியோடேஇச்சுரையை
மிண்டாய்பிடிங்கிவந்து மோடியாய்ப்போடுவையோ
ஆகாயம்பூமியுள்ள அன்றுமுதலின்றளவும்
எப்போதுமிச்சுனைதா னென்றுமிருந்ததுகாண்
தருமர்கையால்வைத்தசுரை சத்திரத்துக்கேற்றதுகாண்
அந்தச்சுரையை அடியோடேபிடுங்கினையே
என்றுகைமையநெரித்தவ்வையார் கற்சுவரில்சார்ந்துகொண்டு
நின்றுபுலம்பி யிருந்தாளே அவ்வையரும்
அபிமன்னன் சுரையிலைநடுவது
அவ்வையார் அழுகிறதை அபிமன்னன் தானுங்கண்டு
நல்லரவான்பிடுங்கினதை நட்டிடுவோமென்றுசொல்லி
பாதாளந்தான் பரித்துபருவேனைஉள்ளேவிட்டு
தருமனைத்தானினைந்து தள்ளிமண்ணைநிறைத்தான்
எப்போதும்போலே இளகிக்கொடியாகி
எங்கும்படர்ந்து இருந்ததுகாணச்சுரையும்
கண்டாளேயவ்வையரும் கைகொட்டித்தாநகைத்தாள்
நகைத்துத்தான்ஔவையாரும் நால்வருக்குபந்திவைத்து
ஔயார்நால்வருக்குஅன்னமிடுதல்
சுனையிலையைப்பூமியிலே துலக்கமுடன்போட்டு
இலையிலேநீர்தெளித்து ஏதுசெய்தாளவ்வையரும்
ஆயிரம்பொறிக்கறிகள் அழுதுவகையுள்ளதெல்லாம்
கொண்டுவந்துபோட்டாள் கூட்டித்திரட்டினார்கள்
பதறுதேகடோற்கஜனே பாம்புவிஷமிதுகாண்

ஔவையார்க்குவுண்டை அள்ளிட்டுப்பாப்போமென்றார்
என்னவிதமானாலும் எனக்குச்செறிகதுவிடும்
எங்களையாம்தவிமா இலையாமல்நஞ்சையுண்டார்
எழுசாடிநஞ்சையுண்டார் எங்களையாமதவிமர்
அன்றுவிடம்செறிக்கிலையோ ஆயனருளாலே
மேகத்துமின்னலது வித்தையதுபாரீரோ
அம்பிகருழ்விபோ லாடுவதுபாருமென்று
கையாலேகாட்டின கனவிமன்னன்ஈக்கப்பன்
என்று-சுரையிலையுஞ்சோறும் சுருட்டிவிழுக்கலுற்றான்
பாரத்திருந்தமூவருந்தான் பசித்திருந்தாரண்ணேயென்றார்
மூவரும்பேசி முகம்பார்த்துயிருக்கலுற்றார்
பார்த்தானேநல்லரவான் பறக்கடித்துக்கண்சிவந்து
கோட்டையிடிபோலே கொக்கரித்துக்கண்சிவந்து
ஔவையாரேயெங்களுக்கு அமுதெங்கேயென்றுரைத்தார்
ஔவையாருமங்கே அவன்கோபந்தான்கண்டு
குருணிபிடிக்குமந்த கூடையிலேகொண்டுவந்தாள்
வயிர்நிறையஉங்களுக்கு வைத்திடுவேன்வுண்ணுமென்றாள்
அப்படியேபோடுமென்றான் அபிமன்னராசாவும்
போட்டாளேயௌவையரும் பொறிக்கறியும்போசனமும்
உண்ணுங்கோளென்று உபசரித்தாள்பாட்டியரும்
அத்தனையுமுண்டு ஔவையைத்தான்பார்த்து
பாட்டிக்கிழவியரே பழஞ்சோறுமீந்திருந்தால்
கொண்டுவாபாட்டியரே குறையறைகளுள்ளதெல்லாம்
என்னக்கிழவியும் ஏங்கிநடுக்கெடுத்து
ஆயிரம்பொறிக்கறிகள் அமுதுகளைத்தான்விழுங்கி
இன்னம்பழஞ்சோறு யிவர்கேட்டால்என்னசெய்வேன்
இருநூறுகாதவழி படர்ந்தசுரையிலையும்
ஒழுமிக்கவிழுங்கி ஒருவருக்குப்போதாமல்
இன்னம்பசியாயிருக்குதென்றுரெல்லனசெய்வேன்
ஆரோஎவரோ அறியாமல்சோறுசொன்னேனே
வில்வில்முடிக்குடையாய்உனக்கெத்தனைசோர்வேணுமடா
எங்களண்ணனிட்டசோற்றிலே அதற்கிரட்டிவேணுமடி
தொந்திபெரியதம்பி உனக்கெத்தனைசோர்வேணுமடா
எங்களண்ணனிருவரிலும் அதிகமாகவேணுமென்றான்
சுறுக்காய்சுரைபிடுங்கி எத்தனைசோர்வேணுமடா
எங்களண்ணனிட்டசோற்றிலேயு மதிகமாய்வேணுமென்றான்
பார்த்தாள்கிழவி பசங்கள்நம்மைக்கொல்லவென்று
இவர்களுக்குச்சோறிட்டு நான்பிழைக்கமாட்டேனென்று
நம்மையுங்கொன்று விழுங்குவானென்றுசொல்லி
நெருப்பெடுக்கப்போறவள்போல் நீண்டாள்பதிநோக்கி
குந்திவழிநடந்து கொப்பெனவேவோடலுற்றாள்
போகாதேபாட்டியென்று பின்பிடித்தாநல்லரவான்

எடுத்துவிழுங்கவந்தார் என்றேதிகைப்பாயந்து
ஆற்றருகேவோடிவந்து ஔவையுமேதுசொல்வாள்
பரமர்திருமுடியி லிருக்குமந்தபார்வதியே
எங்கும்நிறைந்தாளே என்பங்கில்மாதாவே
மகேஸ்வரியேயம்மாநீ மாயன்திருத்தங்கையரே
மகாதேவர்திருச்சபையில் மங்கையரோகெங்கையரே
ஆரோதெரியாது அறியேனோராட்சதனா
என்னைவிழுங்கவந்தார் என்செய்வேன்மாதாவே
ஆபத்தைக்காருமம்மா ஆகாயகெங்கையரே
பாலர்பசிதீராய் பார்வதியேநான்பிழைக்க
ஆதிகெங்கைபாதம ஔவையருந்தெண்டனிட்டு
சோறுங்கறியும் துலங்கியவெண்தயிரும்
ஆற்றிலுள்ளநீரையெல்லாம் அடிசில்கறியாக்குமம்மா
ஔவையார்நினைத்தபடி அப்படியேயுண்டாச்சு
பார்த்தாளாமவ்வைபார் பசங்களண்டையோடிவந்து
ஆசனம்சமைத்தேனடா அப்பாவேவாருங்கள்
இட்டுவந்துநால்வரையுமிறங்குமென்றாளாற்றிலே
ஆற்றிலிறங்கி ஆசனம்பொருந்துமென்றாள்
வயிர்நிறையஉண்ணுங்கள் மக்களேயென்றுரைத்தாள்
அரசமக்கள்நால்வருமாய் ஆற்றிலேபோயிறங்க
கச்சைகளைந்துவைத்து கணக்கவேநீராடி
ஆசனம்பொருந்தினபின் அரசமக்கள்கைகழுவி
வெள்ளிலைக்கற்பூர வேண்டினதுதானருந்தி
சந்தனங்கஸ்தூரி சாந்துமிகவணிந்து
ஔவையிடவாசலிலே அரசமக்கள்வந்துநிற்க
அப்போதுஔவையார் அடிசில்மிகவருந்தி
தாகமதுதீர்ந்து தனித்திருந்தாளவ்வையரும்
அப்போது அங்கே ஆயன்படைவீட்டில்
மேளவகைசத்தம் வெகுவாய்முழங்குமல்லோ
தாரைவிருதுகளும் தம்புமுழங்கிறதும்
மத்தளங்கொட்ட வலம்பூரிநின்றூத
பேரிகைசத்தம் பெருக்கமுழங்கிறதும்
வேந்தரிந்தநால்வரும் வினவாகக்கேட்டிருந்து
விந்தைமுழங்கிறதை விசாரிப்போமென்றுசொல்லி
ஆச்சிகிழவி ஔவைபாரோநீர்கேளும்
இசைவானமேளசத்தம் எங்கேநீசொல்லுமென்றான்
அரசமக்களைப்பார்த்து ஔவையார்யேதுரைப்பாள்
மாயன்மகள்சுந்தரியை வாளபிமர்க்கென்றபெண்ணை
தென்னமுடிவேந்தன் துரியோதனப்பெருமாள்
தன்மைந்தன்லக்குணற்கு மாலையிடவாராளும்
ஆகையினால்முழங்கும் அனந்தவகைமேளமெல்லாம்

என்னகடோற்கஜனு மெடுத்துரைப்பானவ்வையுடன்
அபிமனாநீரும் அறிவீரோஆச்சியரே
சொன்னாலறிவேன்காண் சொற்பெரியவீரியனே
அறிவேன்காண்பிள்ளைகளே அடையாளஞ்சொல்லுகிறேன்
கேளுங்கள்பிள்ளைகளே கிளைசூழ்ந்துவாழ்ந்திருப்பீர்
தாரார்புகழ்வேந்தன் தருமரண்டைநானிருப்பேன்
அப்போதறிவேன்காண் அபிமப்பெருமானே
தருமனாநீரறிந்தால் சற்றுக்குறிசொல்லுமென்றார்
தர்மர்க்கடையாளம் தாழ்கொடையில்மச்சமென்றார்
ஒக்குமோடியாச்சியென்று ஓடிவந்துதெண்டனிட்டார்
தெண்டனிட்டபிள்ளைகளைச் சென்றவ்வையார்தானெடுத்து
ஆரடாதம்பியரோ அடையாளம்சொல்லுமென்றாள்
வீமனிடபிள்ளை பலவான்கடோறகஜனும்
ஔவையார்தன்னுடனே அடையாளமேதுரைப்பான்
தர்மர்க்கிளைய தாக்குடையவீமசேனன்
என்பேர்கடோற்கஜன்தான் என்னாச்சிகமலகன்னி
அர்ச்சுனனார்புத்திரனார் அரவானிவர்காணும்
சகாதேவர்புத்திரனார் தாக்குடையதொந்திசெட்டி
என்றுசொல்லக்கேட்டு எழுந்துவந்துஔவையாரும்
கட்டியணைத்தணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
எங்குவந்தீர்மக்களே இத்தனைதூரமென்றாள்
அர்ச்சுனனார்புத்திரனு மரவானுங்கூறுவான்
மாயன்மகள்சுந்தரியை மணஞ்செய்யவந்தவொரு
மாப்பிள்ளையாகவந்த வாளபிமன்தானேயிவன்
வாளபிமனென்றுரைத்ததுமே வாரியெடுத்தணைத்து
வாரியெடுத்து மடிமீதில்கொண்டுசென்று
ஜூவனையுங்கண்டதுபோல் ஆச்சதுகாணிப்பொழுது
மாயனாலாலே மக்களைக்கண்டோமே
தன்னுடையசிங்கா தனத்தருகேகொண்டுசென்று
உட்காருமென்ன உபசரணைசொல்லியபின்
மணஞ்செய்யவேணுமென்று வந்தீரோமக்களே
ஆனைபணியுள் அரசமக்கள்வந்ததுண்டோ
குதிரையுடனே குலமன்னர்வந்ததுண்டோ
வீமன்மகனார்பலவான்கடோற்கஜன்மார்
வாராயகிழமோதாலே மாயன்துணையாகவந்தோம்
இதுபுதுமைஇதுபுதுமை என்றாளேஅவ்வையரும்
மாயன்தயவாலே வார்த்தைநடந்ததுண்டோ
துரியோதனன்சேனைத் திரள்வருகுதென்றக்கால்
பருந்துதன்கூண்டதனில் பருங்கோழிக்குஞ்சிறுத்து
அதிகாரம்பண்ணூற்போ லெல்லவரும்வாராராம்
முப்பதடிவாசலில் முதிர்ந்தவெள்ளாட்டுமயிர்
அமர்த்திநிறுத்தி லிருப்பது அக்ரோணி

அப்படிபகிர்ந்து அக்ரோணிசேனையுடன்
ஆனதொகையது எழுநூறு அக்ரோணி
இத்தனைசேனையுடன் எம்பெருமான்தன்பதிக்கு
வாரான்துரியோதனனும் மகுடவாத்தனர்கூட
என்றுசொல்லக்கேட்டேன்காண் என்னுடையபிள்ளைகளே
ஆனல்கேளென்றாச்சி அடியேங்கள்செலுகத்தை
யானைத்திரளெல்லாம் அண்ணன்கடோற்கஜருக்கு
குதிரைத்திரளெல்லாம் தாரர்அரவானுக்கு
சேனைத்திரளெல்லாம் செல்வன்தொந்திசெட்டியற்கு
மாப்பிள்ளைராஜனுமே வாளபிமன்கைவசங்காண்
இதுவோசிலபாரம் என்றீரென்பாட்டி
மாயன்மகள்சுந்தரியாள் வார்த்தைதெரியவில்லை
வாளபிமன்மைந்தனுக்கு வாழாளோ இல்லையோ
ஆமல்லோவென்றுசொல்லி அறிந்துவா ஆச்சியரே
தர்மரைப்பற்றியொரு தனித்தூதுபோய்வருவீர்
என்னக்கிழவியரும் ஏங்கிமிகச்சிரித்து
ஏவலிக்காரியம்போல் என்னையேபோகவிட்டார்
எப்படியாகிலும் இப்போதுஒருதூது
போய்வாரும்ஆச்சியென்று போற்றியேதெண்டனிட்டார்
அப்படியேயாகுதென்று ஆச்சியந்தஅவ்வையரும்
கந்தையுடுத்திக் கையிலேகோலூன்றி
பக்கத்தில்பூப்பெட்டி கழலாமல்தான்தூக்கி
போய்வாரேன்மக்களென்று புறப்பட்டாள்ஔவையாரும்
அப்போகடோற்கஜனும்அவ்வைமுகம்பார்த்து
நாயகமாஞ்சுந்தரிக்கு நாலுபேர்மாமியார்கள்
பொன்னானபூஷணங்கள் பொற்கொடிகள்தான்கொடுத்தார்
நாங்களுங்கொண்டுவந்தோம் நாயகிக்குப்பூஷணங்கள்
கொண்டுபோய்ப்பூட்டுமென்று கொற்றவருந்தான்கொடுத்தார்
அப்போது அவ்வையாரும்அரவாணைப்பார்த்தாள்
மற்றுனுடைமையென்று வாங்காளேசுந்தரியும்
என்றுசொல்லக்கேட்டு இயலபிமன்கூறுவான்
பள்ளிக்கிருக்குமப்போ பாடங்கொடுப்பாள்காண்
அப்போகழற்றியிட்ட அம்பொன்திருவாழி
பூச்செண்டுதன்னிலே போகவேகட்டிவைத்தேன்
அந்தஅடையாளம் ஆரணங்கேகாட்டுமென்றான்
பூச்செண்டுக்குள்ளிருக்கும் பொன்திருவாழிதனை
ஔவையாருக்குக்காட்டினான் அணைந்தவாழ்மார்பன்
நல்லதென்றுசொல்லி நகைத்தாள்கிழவியரும்
அப்பாநீங்களிங்கே அடவிவிட்டுப்போகாதீர்
நாராயணர்பதிக்கு நான்போய்வருமளவும்
இங்கேயிருமென்று எழுந்திருந்தாளவ்வையாரும்
சாணுக்குமூன்றடியாய்த்தள்ளாடிதானடந்தாள்

ஔவையுடன் தன்னுடைய அபிமன்னன் தான்பார்த்து
ஔவையார் நடக்கவே ஆறுமாதஞ்செல்லுமென்று
நால்வருஞ்சொல்லி நடந்துபிருக்கையிலே

ஔவையார் சுந்தரிக்கு ஒப்பனைகொண்டு போவது

வாயிலிட்டதைப்போல மாயன்பதிநோக்கி
ஓடினாளவ்வையார் ஒருநொடியில்மாயர்பதி
அப்போதுமாயவனார் அலங்கரிப்பார்தன்பதியை
பவளத்தால்கால்நிறுத்திபந்தலதுபோட்டுவிட்டார்
கொச்சியின்சந்தனத்தால் கொடுங்கையதுபோட்டுவிப்பார்
சப்பிரக்கண்ணாடிவைப்பார் தலைவாழைகட்டிவைப்பார்
எட்டுத்திசையிலேயும் இயல்பெண்கள்நின்றாட
கண்ணாடிகட்டிக் கவரியலங்கரித்து
மண்டபங்கள்தோறும் மகரதோரணங்கள்தூக்கி
மருவிச்சைவெட்டிவேர் எத்திசையும்வீசிவிட
முத்தால்மணல்பரப்பி முழுவயிரக்கால்நட்டி
தண்ணீர்தெளித்துச் சாம்பிராணிதூபமுடன்
ஐந்துதலைநாகத்தின்மேல் அமர்ந்திருந்தார்மாயவரும்
அப்போதுஔவையரு மங்கேவருவாளே
சித்திரப்பாவையிரும்பிக் கூன்கிழவிவந்தாளே
தடிவைத்தணையில்வைத்துச் சற்றேஉருக்கார்வாள்
பன்னீரைப்போட்டு முடக்கிப்படுத்தெழுந்து
மெள்ளவருமிரதை மேகவர்ணன்தான்பார்த்து
அபிமதூதார் ஔவையாரும்வாராளே
குலுங்ககைகணைத்துக் கோவிந்தரென்னசொல்வார்
வாசலறுகாப்பாரைமாயவருந்தானெழுந்து
காசாண்வனத்திலே கடுங்கானகத்திலே
தர்மிடசத்திரத்தில் தான்வாழும்ஔவையாரும்
கோலமொழிசுந்தரிக்குக் கொண்டைமுடிக்குகைக்கு
இப்போவருவா ளினிச்சற்றுநேரத்திலே
அவளைத்தடுத்தவளை அக்கினைகள்பண்ணிவைப்பேன்
அப்படியேயாகுமென்று அருந்தூதர்தெண்டனிட்டார்
அப்போதுஔவையாரும் அசைந்துதடியூன்றி
இப்போதுகைகொடுத்து யேகிவழிநடந்தாள்
சாணுக்குமுன்றடியாய்த் தள்ளாடித்தானடந்தாள்
அங்கிருக்குந்தூதுவர்கள் ஔவையாளைத்தான்பார்த்து
எங்குநீவந்தாய்காண் இனியகிழவியரே
காசாண்வனத்திருந்து கரியமால்புத்திரிக்கு
கொண்டைமுடிக்கவே கெப்பணவேநானிங்கே
அகைபிறவல்வந்தேன்காண் அரியேயென்றுரைத்தாள்
இடுப்பில்தடியேது என்ன இதுமூட்டை
அவ்வேலையாளவிளையோ அள்ளிப்பிடிபெருகநக்கு

வடதோசைசற்கனையோ மற்றுமதிரசமோ
என்னையிதுதானே எங்களுக்குக்கொடுத்துவிட்டு
பின்னேநடவுமென்ருர் பேரறியவெல்லோரும்
என்னைக்கிழவி இவர்களைத்தான்பார்த்து
அல்லகாண் ஆரியரே ஆயன்மகள்சுந்தரிக்கு
பின்னையென்னகொண்டுவந்தேன் பெருமானுடன்சொல்லுவேனே
வாணுங்காண்மாதாவே வழிவிட்டோம்போமென்ருர்
அப்போதுஔவையாரும் அரண்மனையில்போய்புகுந்தாள்
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
இரண்டாம்படித்தளமாம் இரத்தினகால்மண்டபமாம்
மூன்றும்படித்தளமாம் முத்துககால்மண்டபமாம்
நான்காம்படித்தளமாம் நாகரத்தினச்சாவடியாம்
ஐந்தாம்படித்தளமாம பஞ்சரத்னமண்டபமாம்
ஆறும்படித்தளமாம் யானைகட்டுஞ்சாவடியாம்
ஏழாம்படித்தளமாம் எண்ணைக்கால்மண்டபமாம்
எட்டாம்படித்தளமாம குதிரைகட்டுஞ்சாவடியாம்
ஒன்பதாம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
பத்தாம்படித்தளத்தில் வந்தாளே அவ்வையரும்
அப்போதுதாதியர்கள் அங்கேயிருந்தார்கள்
வாங்களடிதாதியரே மாயன்மகளெங்கேயென்ருள்
ஏழாந்தளத்தில் இயலாளபெண்களுடன்
அம்மானுர்பந்துசழல் அபிமரிடபேராலே
அத்தைமகன்பேராலே ஆடுகிருள்பாருமென்ருர்
தாதியர்கள்சொல்லனுமேதரியாளேஔவையாரும்
ஆயன்மகளாரும் அம்மானுர்தானிறுத்தி
பலகணிதாள்திறந்து பார்த்தாள்திசைதோறும்
மைத்துனனுர்வாளபிமன் வாராரோவென்றுசொல்லி
பார்த்தாள்திசைதோறும் பங்கயஞ்சீர்கண்ணுளும
பார்த்தவழிகளெல்லாம் வேற்றுவழியாச்சுதல்லோ
பார்த்தன்மகனேயின்னம்பார்க்கவிதியில்லையோ
முத்துமுலைத்தனங்கள் சொருகுதடாமைத்துனனே
மோகனசிங்காரம் அழியுதடாவாளபிமா
சொல்லுமிழந்தேன் செலவழிந்தேன்மைத்துனரே
வில்விஜயன்தன்மகனே வேந்தர்பெருமானே
சிங்கவெள்ளையானையுள்ள தேவேந்திரன்பேரா
உன்-மாதுபடுந்துயரம் மாற்ருயோமைத்துனரே
யானைக்கிடுங்கரும்பா யங்கங்குலைந்தேனே
வேழமுண்டவிளாவின் கனியானேன்மைத்துனரே
மத்துக்குள்ளகப்பட்ட தயிரானேன்மைத்துனரே
ஆயன்மகளாரும் அழுதுநெடுநேரம்
தன்னைவளர்த்தெடுத்த தாதிமடிமேலே
பொய்யுறக்கமாயிருந்து பொற்கொடியும்பள்ளிகொண்டு

பிரக்குடைபிடித்து பிறந்ததுயிலுடுத்தி
வனந்தனைதிகநோக்கி மாயவரும்போய்கடந்தார்
காடுகடந்து கடியவனங்கடந்து
பஞ்சவர்கள் தானிருக்கும் பாரவனந்தனிலே
மாயன்பெருமாளும் மறையவரைப்போல்வருவார்
கண்டார்திருமாலுங் காவலர்களைவரையும்
ஆர்காணுந்தம்பியர்கள் அடவியில்வீற்றிருந்தீர்
என்று-வழியுந்தெரியாமல் வனமருகேவந்துவிட்டோம்
கொற்றவர்கள்கோமானே கூவுறதுகேழ்க்கிலையோ
ஆனந்தவாழ்மா அழைக்கிறதுகேழ்க்கிலையோ
வழிகப்பிவந்தவர்போல் மன்னரண்டைவந்துநின்றார்
தாரார்புகழ்வேந்தர் தர்மரெழுந்திருந்தார்

தர்மர்பிராமணரைக்கேட்பது,

ஆர்காணுந்தம்பியரே அடவியில்வந்துவிட்டீர்
மாயன்பெருமாளே மறையவர்போல்வந்தீர்
ஐவரும்துரோபதையும் ஐங்கால்வலம்வந்து
பதின்கால்வலம்வந்து பன்னிருகால்தெண்டனிட்டு
ஆயன்பெருமாளே அறிந்தது கூறுமென்றான்
மாயன்பெருமாளே மர்மமாய்இருப்பானேன்
அல்லகாண்தம்பியரே ஆயன்மகள்சுந்தரியை
மாயன்மகள்சுந்தரியை வாளபிமனுக்கென்றபெண்ணை
தென்னமுடிவேந்தன் துரியோதனப்பெருமாள்
தன்மைந்தன்லக்குணர்க்கு மாலையிடப்போறானும்
துவாரகைக்குப்போனால் துரைமன்னரங்கிருப்பார்
நேக்கு அமுதுபடிகொடுப்பார் ஆனந்தவாழ்மாபா
ஆகையினால்போகவுந்தன் அடவியிலே வந்துவிட்டேன்
எனக்கு-வழியுந்தெரியவில்லை மன்னனேஎன்னசெய்வே
துவாரகைக்குப்போகவழி சொல்லியனுப்புமென்றான்
ஐவருமப்போது ஆலோசனைசெய்து
மாயவரேதப்பாது மறையவர்போலவந்தீர்
ஆயன்பெருமாளே அடிபணிந்துவணங்குவார்
காரியங்கள்சொல்லி கரியமாலப்போது
அதனைகள்சொல்லி அரிக்கையிடவந்தீரோ
யேதுகருமம் எங்களுக்குச்சொல்லுமென்றார்
ஐவருந்தெண்டனிட்டு அடிபணிந்துகேழ்க்கலுற்றார்

நல்லரவான்சேவகக்கை நாமறியவேண்டுமென்று
ஆசைசங்கற்பாலாக ஆயருங்காமறைந்தார்
மாயனரண்மனையில் வாளாமென்சுந்தரியும்
இருவருந்தோட்டமா யிருந்தார்களப்பொழுது
உத்தமர்கள்வேதியர்கள் ஓமவிதங்கள்செய்ய
வெற்றிப்பிராமணர்கள் வேதங்கள்வோதிநிற்க
ஆளப்பிறந்த அரவான்முகம்நோக்கி
மாயன்பெருமானை வரவழைத்துவருமென்றார்
அரவானுமாயவனை அதட்டிப்பயக்கானழைக்கான்
சுத்திதிரும்பி திசைதோறும்பார்க்கலுற்றான்
பாரளந்தமாயவனை பந்தலிலேகாணமல்
எங்கெங்குந்தேடி இராஜர்முடிவேந்தன்
வேந்தர்பெருமானும் வெளியேபுறப்பட்டார்
அஞ்சனதிருஷ்டியிலே அரவானும்பார்க்கலுற்றான்
மண்டபத்தைவிட்டு வருகிறார்மாயனும்
கண்டானரவான் கடுகப்பிடிக்கவென்று
மாயன்பெருமானும் மச்சவடிவுகொண்டு
மச்சவடிவுகொண்டு மடுவிலேபோய்மறைந்தார்
அரவானும்விச்சுளியாய் ஆயனைப்பாயலுற்றான்
மாயன்பெருமானும் மறைவாகவோடிவந்து
அரவானெதிராக ஆண்சிங்கம்போல்வருவார்
சிங்கவடிவாக சீறிவருகிறதை
கண்டானரவான் சடுகெனவே தான்பாய்ந்து
சிம்புள்வடிவாகி சிவுகென்றுமேற்குதித்தான்
அப்போதுமாயவரும் அரவானைத்தப்பிவந்து
மாயவருமப்பொழுது மான்வடிவாயோடலுற்றார்
பார்த்தானேநல்லரவான் பதுங்கியெழுந்திருந்து
சிவங்கிவடிவாய்த் தாக்கிப்பிடிக்கலுற்றான்
அப்போதுகப்பிவந்து ஆயருமேதுசெய்தார்
ஆயன்பெருமானும் ஆமைவடிவெடுத்து
புதருஞ்செடியருகே போய்ப்புகுந்தார்மாயவரும்
அஞ்சனதிருஷ்டியிலே அறிந்தாரோமாயவனை
ஆலங்கவாழ்மார்பன் அரவான்குராவனைப்போல்
சில்லாக்கோல்கைபிடித்து சிக்கெனவேகுத்தலுற்றார்
அப்போதுமாயவரும் அரவானெதிரில்வந்து
காட்டிலொருபன்றியைப்போல் கடுகியேயோடலுற்றார்
பார்த்தானரவான் பன்றியாயோடுவதை
வேட்டைநாய்போலரவான் பிஜத்தைப்போய்பிடித்தான்
ஆயனும்முன்னிழுக்க அரவானும்பின்னிழுக்க
ஆயன்பெருமானுக்கு ஆபத்து ஆச்சுதல்லோ
தவித்துதடுமாறி தப்பித்துமாயவரும்

கொக்காய்வடிவுகொண்டு கோபாலரோடலுற்றார்
அஞ்சனையிருந்தவிடியிலே அறிந்தானேமாயவனை
சீக்கிரமாய்நல்லரவான் கொக்கையைப்போல்வடிவுகொண்டு
கிழெவிழவறைந்து கெட்டியாய்தான்பிடித்தார்
வேதநாராயணனும் மெத்தெனவேதப்பிவந்து
எலிபோல்வடிவுகொண்டு இல்லையில்தான்நுழைந்தார்
அரவானதுகண்டு அப்புறமேபோய்ப்பதுங்கி
பூனைவடிவாகிப் பதுங்கியிருக்கலுற்றான்
பெருமாளுமங்கிருந்து போறுதேறைபயலென்று
எட்டியேபார்க்கலுற்றார் எலிபோலேமாயவரும்
ஒளித்திருந்தநல்லரவான் சென்னியைப்போய்ப்பிடித்தான்
உறுதியாய்ப்பிடித்திடவே உள்ளங்கலங்கிடவே

பெருமாள்சொல்வது.

மண்டைபிடித்திடவே மேகவர்ணன்தான்பார்த்து
கெச்சிதேவன்மருகனே கிடுகிடுமெனவுரைத்தார்
விட்டசொல்லதுவீரோ விண்ணளந்தமாயவரோ
வருகிறேனென்றுசொல்லி மாயவரும்போய்மறைந்தார்
பார்த்தானேநல்லரவான் பார்வேந்தரெங்கேயென்று
இளைத்தானேநல்லரவான் திருமாலைகாணாமல்
அப்போதுமாயவரும் ஆனிடையனைப்போல்
ஏமபெருமாளப்பொழுது இடையனைப்போலவந்தார்
கண்டானேநல்லரவான் கடுகெனவேயோடிவந்து
பகையக்காரனைப்போல் படபடென்றோடிவந்தான்

அரவான்சொல்வது,

இடையனைக்கட்டிப் பிடித்தநல்லரவான்
ஆனைமனைவாசலுக்கு ஆட்டுக்கிடையேனுமென்று
பாலும்தயிரும் பதினாலம்வேண்டுமென்று
கொண்டுவாடா இடையாநீ சொப்பெனவேயென்று
அண்ணுக்கான்போட்டு அடித்தானேநல்லரவான்
பாராங்கல்லானெடுத்து பாரளந்தார்மீதில்வைத்து
தலையெடுக்கவொட்டாமல் தார்வேந்தனடிக்கலுற்றார்
அறிந்தாரேமாயவரும் அரவான்சவுரியத்தை
கெச்சிதேனன்நல்லரவான் கிடுகிடுவென்றுரைத்தார்
இனிசிறிதும்நல்லரவான் இப்பொழுதேநான்வாரேன்
என்றுமேநல்லரவான் இராமனைக்கைப்பிடித்து
மாயவரைப்பற்றி இழுக்கலுற்றானப்பொழுது

பெருமாள் சொல்வது,

அப்போது மாயவரும் அரவானுக்கேதுரைப்பார்
மனிதனைக்கொன்று மகாபாதகஞ்செய்தீரே
மனிதனைக்கொன்றரவான் மணஞ்செய்யக்கூடாது
பாதமிருந்தது காண் பந்தலிலேயிப்பொழுது
காசியிலேபோய்முழுகிக் கலியாணஞ்செய்யவேண்டும்
அப்பாதகந்தீருமதுவுமேதண்ணீரிலே
காசிப்பிராமணனை கலியாணப்பந்தலிலே
இட்டுவந்துவிட்டாக்கால் என்மகளைத்தருவேனப்பா
அல்லாதுபெண்கொடுக்கேன் அறையர்கள்தானறிய

அரவான்சொல்வது.

என்ன அரவானும் இராமர்முகம்நோக்கி
காசிப்பிருமணர்கள் வேண்டுமென்றீர்காவலரே
இப்போதுவேதியர்கள் எங்கிருப்பார்சொல்லுமென்றான்
மாயன்பெருமாளும் மறைப்பாகவேதுரைப்பார்
காசிக்குப்போய்வருவார் காவலரேவேண்டியபேர்
வழியிலொருமடத்தில் வந்திருப்பார்வேண்டியபேர்

அரவான் காசிப்பிராமணரைக் கண்டுபிடிப்பது,

அப்போதுநல்லரவான் ஆக்கறித்துப்பற்கடித்து
பந்தலைவிட்டு பார்மன்னன்வெளியேவந்து
எங்கெங்குந்தேடி இராஜமுடிவேந்தன்
அலைந்தெங்குந்தேடிவந்தான் ஆணழகன்புத்திரனும்
ஊருக்குமேற்கே ஒருமண்டபந்தானிருக்க
மண்டபமொன்றிருக்கும் மாயனருளாலே
பஞ்சவர்களைவரும் பாப்பாரைப்போலாக
காசிப்பிராமணர்போல் காவலர்களங்கிருப்பார்
கண்டானரவானும் கடுகெனவேயோடிவந்து
மண்டபத்தைநோக்கி வரலுற்றான்மன்னவனும்

காசிப்பிராமணரை அரவான்கேட்பது

காசிப்பிராமணரை கண்டானரவானும்
மண்டபத்தைச்சேரவந்து வணங்கியெழுந்திருந்து
ஐவரையுந்தெண்டனிட்டு அரவானுங்கூறலுற்றான்
ஆர்காணும்ஐயரே அறியபிராமணரே
எங்கிருந்துஎங்குவந்தீர் எனக்கறியச்சொல்லுமென்றான்

காசிப்பிராமணர்சொல்வது.

மாயப்பிராமணரும் வார்த்தையங்கேதுரைப்பார்

அவனுடையபிள்ளை அறியவுரையுமென்றார்
பெருமாள்சொல்வது,
மாயன்பெருமாளு மறையவர்க்குயேதுரைப்பார்
காவணக்காலன்னடை கட்டுண்டோராரென்றீர்
திரியோதிரன்மகன்காண் செல்வனிலக்குணனும்
திரியோதிரனார்காணுந் தெரியவுரையுமென்றார்
இகோ-பந்தலிலேகட்டுண்டபாரமுடிமன்னவனும்
திரியோதிரப்பெருமான் சேனைக்கதிகாரன்
இந்த-மன்னவர்களெல்லாம் மகராசன்தம்பிமார்
இவருடையமைந்த னிலக்குணர்காணுமிவன்
காசிப்பிராமணர் சொல்வது,
என்னபிராமணரும் இராமர்முகம்நோக்கி
மனைசில்உட்கார்ந்த மாப்பிள்ளையார்காணும்
விண்ணளந்தமாயவரும் வேதியற்குயேதுரைப்பார்
பெருமாள்சொல்வது,
பாண்டவர்ஐவருண்டு பாருலகோர்தாமறிய
தருமனென்றும்வீமனென்று தாஷ்டிகவிஜையனென்று
நகுலசகாதேவ ராஜாக்களைவருண்டு
ஐவர்நடுவில் அர்ச்சுனனார்புத்திரர்காண்
அர்ச்சுனனார்புத்திரர் அபிமனிவர்காணும்
மனைமேலுட்கார்ந்த வாளபிமன்தான்காணும்
மாயப்பிராமணரும் மாயவர்க்குயேதுரைப்பார்
திரியோதிரனார்க்கு திரள்குமாரர்பஞ்சவர்க்கும்
உரன்முறைகத்திலவங்க ளுண்டோநீகூறுமென்றார்
பெருமாள்சொல்வது,
மறையவர்கேட்கவே மாயவருமேதுரைப்பார்
திரியோதிரனார்க்கும் திரள்வீரர்பஞ்சவர்க்கும்
பங்காளிகத்துவத்தால் பகையுண்டியாவர்க்கும்
தம்பிமகன்தேவியரை தமையன்மகன்கொள்ளவந்தான்
ஆகையினால்கட்டிவைத்தார் அறியபிராமணரே
காசிபிராமணர் சொல்வது.
மாயப்பிராமணரும் மறுவார்த்தையேதுரைப்பார்
பஞ்சவர்களிக்கிலையோ பாரளந்தமாயவரே
பஞ்சவர்களிக்கிலைகாண் பாரவனம்போனார்கள்
இட்டுநீர்வார்க்கவும் இங்கிலையோபஞ்சவர்கள்
பெரியப்பாரல்லவோ பெருக்கமுடன்செய்யவேண்டும்
தகப்பன்மாரில்லாமல் தரிப்பாரோமங்கிலியம்
தம்பிமணமெறிய தான்மணம்செய்வாரோ
பாவமிதுபாவம் பக்கல்மேலாங்களிரும்
அறியாமல்வந்துவிட்டோம் அதிகாரபந்தலிலே
ஆரபந்தலிலே அழைத்துவந்தாயெங்களைநீ

தோஷமிதுதோஷம் சொல்லாமல்விட்டிடுங்காய்
இன்றிருக்கப்போகாதென்று எழுந்திருந்தார்வேதியர்கள்

பெருமாள்சொல்வது.

அப்போதுமாயவரும் அரவானுடன்யேதுரைப்பார்
வேதியர்கள்போனக்கால் விஜயன்மகனுக்கு
பெண்கொடுப்பதில்லையென்று பெருமாளுங்கூறலுற்றார்

கடோற்கஜன்சொல்வது,

அப்போதுகடோற்கஜனும் அரவான்முகம்நோக்கி
தம்பியரேகேளாய்நீ சமயத்துக்கேற்றபடி
ஆயனார்சொற்படிக்கு அரவானேசெய்யுமென்றான்
ஆனந்தவாழ்மார்பன் அரவானெழுந்திருந்து
மாயன்பிராமணரை வணங்கியெழுந்திருந்து
வேதியரேயுங்கள் மனம் வேணபடிசெய்கிறேன்
மையலோடேநீங்களிப்போ மணமுடிக்கவேணுமென்றார்

காசிப்பிராமணர்சொல்வது,

வேதப்பிரமணரும் வேதியருங்கூறுவார்
பந்தல்மேலேகட்டிவைத்த பாரமுடிமன்னவரை
கட்டவிழ்த்துவிட்டு கலியாணஞ்செய்யுமென்றார்
காலோடேகட்டிவைத்த காளையிலக்குணனை
கட்டவிழ்த்துவிட்டு கடுகமுழுக்காட்டி
ஆனபொன்பணிகளிட்டு அழைத்துவந்துவிடுமென்றார்
அப்படியேயாகுமென்று அரவானுமோடிவந்து
துரியோதனனோடே தீரன்மன்னர்நூற்றுவரை

அரவான் துரியோதனன்முதலானவரைக்
கட்டவிழ்த்துவிடுவது,

கட்டையவிழ்த்துவிட்டுக் கறுத்துள்ளநல்லரவான்
மாற்றானிலக்குணனை வரிந்தகட்டைத்தானவிழ்த்து
விளக்கையெடுத்து வேந்தனைத்தானெழுப்பி
நாவிதனைக்காலழைத்து ஜலக்கசன்வாருமென்பார்
பொன்பூட்டிப்பட்டுடுத்தி பூவையிலக்குணற்கு
கொணர்ந்துவிட்டார்கள் கொற்றவனிலக்குணனை
ஆனந்தமார்பன் அரவானதுபார்த்து
தம்பியிலக்குணனே சதிராகுமென்றான்
காசிப்பிராமணரும் கலியாணப்பந்தலிலே
மாயனரும் மறையவருந்தானிருந்தார்
தென்னமுடிவேந்தன் துரியோதனன்மனையில்
காசிப்பிராமணர்கள் கட்டவிழ்த்தபுண்ணியத்தால்

ஊர்வலம் வருவது.

துரியோதனனும் தீரன்தம்பிநூற்றுவரும்
மாமன்சகுனியும் மைத்துனன்சேத்தரசன்
காசிப்பிராமணர்க்கு வணங்குவித்துதெண்டனிட்டார்

கலியாணம்வாழ்த்தியே காவலர்கள்கொண்டாட
பெண்ணைப் பிறந்தவர்கள் பெருமைசொல்லகேட்டிருந்து
அரவாணெழுந்திருந்து அழகுமண்டபந்தனிலே
மணப்பாக்குவெற்றிலையு மறையோர்க்குத்தான்வழங்கி
மன்னவர்கட்கெல்லாம் வரிசைபடவழங்கி
சந்தனங்கள்பூசியே தார்வேந்தரெல்லோரும்
பாக்குகள்வெற்றிலையும் பலபேர்க்குத்தான்வழங்கி

பெருமாள் காமதேனுவையழைப்பிப்பது.

கலியாணம்பார்க்கவந்த கனமானமன்னவர்க்கு
போசனங்களிட்டு பூரிக்கவேண்டுமென்று
மாயன்பெருமாளும் மனதிலேதானினைந்து
காமதேனுவென்னுங் கனமானபசுக்கள்தம்மை
வருகவருகவென்று வரவழைத்தார்மாயவரும்.

காமதேனுவருவது,

வந்ததேகாமதேனு மாயவனைக்கண்டவிட்டு
என்னையழைத்தபணி யேதுகருமமென்று
கேட்டதேகாமதேனு கிருபையுள்ளகிரீட்டியை

பெருமாள் கூறுவது,

மாயன்பெருமாளு மறுவார்த்தைசொல்லலுற்றார்
திக்குத்திசையாற்கும் திரியோதிரன்சேனைக்கும்
மற்றுமுள்ளராசாக்கள் மன்னவர்கடங்களுக்கும்
யானைகுதிரைகளும் ஆள்பேருஞ்சேவகற்கும்
போசனமும்நல்ல பொரிக்கறியும்பச்சடியும்
பருப்பும்புளிக்கறியும் பாயசமும்பகுவையும்
அறுபத்துநான்குவகை யதிரசமுமுப்பழமும்
கற்கண்டுசர்க்கரையும் காட்டுலாப்பழமும்
வாழைப்பழமுடனே மாங்கனியும்தேன்கனியும்
மாலுங்காயுடனே பலவிதங்களுள்ளதெல்லாம்
பந்திவைத்துஇக்கணையிற் பருகவிடச்சொன்னாரே

காமதேனு விருந்திடுவது,

அந்தமொழிகேட்டு அன்புடனேகாமதேனும்
வந்தமன்னரத்தனைக்கும் வாசலிலேபந்திவைத்து
சொன்னமொழிவிருந்து தொடுத்துவரவிட்டதுகாண்
பாலாரும்நெய்யாரும் பந்தலிலேதான்வழங்கி
போசனங்கள்தானருந்திப் புறப்பட்டார்தார்வேந்தர்
யானைகுதிரையுடன் பெருங்கூட்டமுடன்
காலைபெறுதகன் நாலுலட்சம் அஞ்சிலட்சம்
மிகுந்ததிக்கால்நடைக்கு வேணுமென்றதீனியெல்லாம்
காமதேனுதான்கொடுத்து கடக்கப்போய்நின்றதுகாண்
மாயன்பெருமாளும் வரிசையெல்லாந்தான்பார்த்து
சந்தோஷப்பட்டுத் தலையசைத்தார்மாயவரும்

எல்லாருமப்படியே எண்ணிவிசாரமிட்டார்

அரவான்முதல் நால்வருஞ்சொல்வது.

படுத்தார்களெல்லோரும் படைமன்னர்தான்கூட
நல்லரவான்தொங்கிசெட்டி நற்பாலன்கோற்சஜனும்
பேசினார்நால்வருமே பெருமாள்சவுரியத்தை
அம்மான்சௌரியத்தை அனைவோரும்பார்த்தோமே
நம்மாலேதான்வருமோ நல்லவிருந்திடவே
என்றவர்கள்பேசி யிருந்தார்கள்நால்வருந்தான்
பொழுதுவிடிந்ததுகாண் புறப்பட்டார்சூரியரும்
ஆயன்பெருமாளு மப்பொழுதெழுந்திருந்து
ஸ்நானங்கள்பண்ணி சதிரானமாயவரும்
காலக்கடன்கழித்து கனமானமாயவரும்
அரவானைத்தானழைத்து ஆயன்பெருமாளும்
இரியோதிரனுக்கும் தேசத்திலுள்ளவர்க்கும்
பகல்விருந்துசொல்லிவர பரிசாரமாயவரும்
அப்படியேசொல்லிவந்தான் அரவானவர்களுக்கு

இரியோதிரன் பயணப்படுவது.

தென்னமுடிவேந்தன் இரியோதிரன்பார்த்து
நல்லரவான்தன்னுடனே ஞாயமாய்ச்சொன்னானே
கலியாணக்காரியமும் கனவிருந்துமாச்சுதே
நாலுநாளாச்சுதே நாங்களிங்கேவந்து
ஊருக்குப்போய்வாரோ மென்றுரைத்தான்இரியமன்னன்
பூணிக்கையாகவே போய்வாரோமென்றானே

அரவான் தடுப்பது.

அவ்விசேஷங்கேட்டு அரவானுங்கொக்கரித்து
போரவர்கள்தங்களையே பிளந்திடுவேன்தடியாலே
ஊருகோலம்வந்து உரவாடிமொய்யெழுதி
தேறுகலைசெய்வித்து உன்சீமைக்குப்போமென்றான்
அவ்விசேஷங்கேட்டு அடங்கினான்இரனும்
வந்தானேநல்லரவான் மாயவற்குதெண்டனிட்டான்
அவ்விசேஷமெல்லாம் அரவானுரைத்தானே

பெருமாள் மறுபடியும் விருந்திடுவது.

சந்தோஷப்பட்டுத் தலையசைத்துமாயவரும்
கனமானமாயவரும் காமதேனுவையழைத்தார்
வந்ததேகாமதேனு மாயவனைதெண்டனிட்டு
என்னையழைத்தவகை யேதென்றுகேட்டதுகாண்

பெருமாள்சொல்வது.

மாயன்பெருமாளும் மறுவார்த்தைசொன்னாரே
அன்னமும்பாலும் அமுதுடனேநெய்மோரும்
என்னவனைத்துடனே இனியபக்ஷிகளெல்லாம்
ஒன்றுங்குறையாமல் உடன்படிக்கைசெய்யுமென்றார்

அப்படிப்போவதுவென்று ஆயனுஞ்சம்மதித்து
மாயன்மனமகிழ்ந்து மருமக்கள்மாதருக்கு
பட்டுசால்பச்சைவடம் பாங்காய்க்கிரீடமும்
கடுக்கன்கொலுசுகளும் கனமானமோதிரமும்
வேண்டியபணிதியெல்லாம் வெகுமானந்தன்கொடுத்து
தோகைநல்லாள்சுந்தரிக்கு சீதனமாகவென்று
நாற்பதினாயிரங்கோடி நடையானைபாற்பசுவும்
அடியார்கள்தோழியர்கள் ஆயிரந்தான்கொடுத்து
பல்லக்குதந்தண்டிகை பசும்பொன்னிழைத்ததுதான்
சீதனங்கள்தான்கொடுத்து திருமால்மகன்தனக்கு
மாப்பிள்ளைக்கும்பெண்ணுக்கும் வரிசையுடனொப்பாக்க

அபிமன்னன்சொல்வது,

அப்போதுவாளபிமன் ஆயனைத்தெண்டனிட்டு
பெருமாளேஎங்களுடை - பெரியப்பன்தங்களெல்லாம்
ஏழுநாள்வஷ்டம்பெற்றான் யானைசுமந்தகனம்
பரிசம்பொருக்குதீரோ பாரளந்தமாயவரே
பேதையென்றுசொல்லியல்லோ பெண்கொடுக்கமாட்டோமென்றீர்
எங்கள்-பாட்டனார்தேசம் பழம்பொருளே இத்தனையும்
முலைப்பாலுக்கொருபொருள் முப்பதுபொன்னுண்டதற்கு
முப்பதுபொன்னுமுதலெடுத்துக்கொண்டருமையா
மற்றப்பொன்பூஷணமும் மாறுமல்பொதிபிடித்து
ஆனைதங்கிபட்டணத்தே அனுப்புமென்றான்வாளபிமன்
தப்பாதேஅனுப்பிவிடுந் தாரணியளந்தவரே
உடைமைகொடுத்து உறவாடுமென்றுரைத்தான்

பெருமாள்சொல்வது,

என்னப்பெருமாளிருதோளும்பூரித்து
தங்கைமகனுரைக்க தரணியளந்தமாயவரும்
மருமக்கநல்வரையும் மகளானசுந்தரியும்
வாழ்த்திவிடைகொடுத்தார் மாளிகையிலுட்புகுந்து
மாமியார்லட்சுமியை மன்னவர்கள்தெண்டனிட்டார்
மங்கைநல்லாள்சுந்தரியும் மாதாவைதெண்டனிட்டாள்
மருமக்கள்நால்வரையும் வாழ்த்தியெடுத்தணைத்து
மகளாரைசென்றெடுத்து வாயாரவாழ்த்தலுற்றார்
மங்கிலியமுண்டாவீர் மைந்தரைப்பெற்றிடுவீர்
பூமியையாண்டிடுவீர் புத்திரரையுற்றிடுவீர்
வாயாரவாழ்த்தி மகிழ்முகத்தைமுகர்ந்துகொண்டு
போய்வாருமென்று விடைகொடுத்தாள்பொற்கொடியும்
அங்கேவிடைகள்பெற்று ஆயனைதெண்டனிட்டு
துவாரகாபதியைவிட்டு துரைமன்னர்நடந்தார்

ஒளவையார்வீட்டிற்குவருவது,

ஒளவைவனத்தேகு அரசமக்கள்போய்நடந்தார்

பச்சிலைப்பாய்மீதில் பரிந்தேகுட் கார்ந்தாள்
பாலும்பழமும் பணிவெள்ளைச்சக்கரையும்
கூட்டிக்குழப்பி கொடுத்தார்கள் தாதியர்கள்
வாங்கியமுதுமுண்டார் வாளபிமன்சுந்தரியும்
ஊர்கோலம்வந்து உள்ளானார்மொய்யெழுதி
பாக்கிலையும்வாங்கிப் பரிமளமேமேற்பூசி
அன்னக்கறிகாய் அடைவாகவேபளித்து
உண்டெழுந்துபோனபின்பு உத்தமர்கள்வீரியர்கள்
வாளபிமன் தேவியுடன் மகிழ்ந்திருந்தானங்கொருநாள்
அங்குநாள்போக்கி மறுநாள்கழிந்தபின்பு
அரவான்கடோற்கஜனும் அபிமனுந்தானெழுந்து
ஆச்சிசெல்லவீரகெங்காள் ஆசனத்தில்சேரநின்று
மாதாவுக்கேற்ற மலர்தூவித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தொரு மக்களைச்சென்றெடுத்து
வாயாலேவாழ்த்தி மதிமுகத்தைமுகந்துகொண்டார்
ஆச்சிநீர்கேளீர் அடியேன்கள்விண்ணப்பம்
ஆச்சிசுபத்திரையும் அபிமனைத்தேடிருப்பாள்
அனேகநாளாகுதுநா னையன்பதிக்குவந்து
விடைதாருமாச்சியென்று விடுதிக்குப்போகவென்றான்

வீரகெங்காள்சொல்வது,

இரித்தானைமகிழ்ந்து செட்டிமகள்வீரகெங்காள்
மக்களைப்பார்த்து மனமகிழ்ந்துவீரகெங்காள்
போசனச்சாலையிலே பொற்கொடியும் போய்ப்புகுந்தாள்
மக்களிருவருக்கும் வரிசைப்படியாக
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
பக்குவத்துநெய்த்தளிகை போதமிகப்படைத்து
அசனமுண்டபிற்பாடு அள்ளிலைப்பாக்குமிட்டு
மருமகன்சுந்தரிக்கு வரிசைபணிதியுடன்
தோழிமாராயிரஞ்சுந்தரிக்குத்தான்கொடுத்து
மைந்தனபிமனுக்கு வரிசைபணிதியுடன்
யானைகுதிரையுடன் அடியார்களாயிரமும்
வேண்டுமட்டுங்கொடுத்து வீரகெங்காளப்பொழுது
வாழ்த்திவிடைகொடுத்து வழிவிட்டனுப்பலுற்றாள்
அச்சேதிவிடைபெற்று அலைகெங்கைநன்னாடர்
இரவும்பகலும் இளைப்பாறிவழிநடந்தார்

நடந்தார்களப்பொழுது நாககன்னிபட்டணத்தில்
நாடுகடந்து நகரிபலகடந்து
காடுகடந்து கடுகவழிகடந்து
நாககன்னிவீற்றிருக்கும் நல்லதொருபட்டணத்தே
பாதாளலோகத் தடவறையில்வந்துநின்றார்
காளையரவானும் கடுகியேமுன்னோடி
முன்னாலேயோடி முகத்தெதிரில்வந்துநின்று
சுத்தியேவந்துநின்று சுருக்காகத்தெண்டனிட்டு
அன்னையார்பாதத்தில் அரவானுந்தெண்டனிட்டான்
தெண்டனிட்டபோது திடுக்கிட்டெழுந்திருந்து
அபிமன்கடோற்கஜனும் அன்பாகத்தொங்கிசெட்டி
சுந்தரியாள்தானுஞ் சுருக்காகவந்தார்காண
வந்தாரிதோபாரும் மாதாவேயெனமொழிந்தார்
மக்கள்வருவாரை மாதாவுந்தான்கேட்டு
பாக்கியனைசேரழைத்து பைங்கொடியுங்கூறுவாள்
வீடுமெழுகி வியாகக்கோலமிட்டு
கஸ்தூரிகொண்டுவந்து கரைத்துதெளியுமென்றாள்
குத்துவிளக்கெங்கும் கொழுந்துபடவேற்றுமென்றாள்
மாணிக்கதீபங்கள் வையுமென்றாள்எத்திசையும்
இரத்தினக்கம்பளியை யெத்திசையும்போடுமென்றாள்
ஆலாத்தியேத்துமென்றாள் ஆயிரம்பெண்கள்தன்னை
மாதாவும்நாககன்னி மைந்தர்க்கெதிராக
பாதாளலோகம்விட்டு பார்த்தனிடதேவியரும்
பல்லக்குமீதேறி பைங்கொடியுந்தான்வருவாள்
மாதாவரவதன்னை மன்னவர்கள்கண்டுகொண்டு
யானைகுதிரை அரசர்கள்விட்டிழிந்து
மாதாவுக்கெதிராக மன்னவர்கள்வந்துநின்று
மாதாவின்பாதம் மலர்தூவிதெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை வாரியெடுத்தணைத்தாள்
ஆபன்மகளாரும் அன்பானசுந்தரியும்
பல்லக்கைவிட்டிழிந்துபார்த்தாள்மருமகளும்
அத்தையார்பாதம் அடிபணிந்துதெண்டனிட்டாள்
மாமிசரணமென்று வணங்கினாள்சுந்தரியும்
வந்துபணிந்த மருமகளைச்சென்றெடுத்து
வாழ்வீர்வளருவீர் மைந்தனைப் பெற்றிடுவீர்
பூமியை ஆளுகைக்கு செல்வனைப்பெற்றிடுவீர்

வெள்ளிலைக்கற்பூரமு வேண்டும்படியளித்து
சந்தனமுங்குங்குமமும் சாந்துபரிமளமும்
மன்னர்பெருமாளே வாழ்வீரெனவளித்து
மருமகள்சுந்தரியே வாழ்வாயெனவளித்து
வாழ்த்திவிடைகொடுத்து வழிவிட்டனுப்பலுற்றாள்
மகனை அரவானை மங்கையருந்தானழைத்து
அபிமனைக்கொண்டுபோய் ஆச்சினைக்கியிலெலாப்பிவித்து
ஐந்தாறுநாளிருந்து அப்பாவே வாருமென்றாள
மன்னவரும்சேனையுடன் வாகனங்கள்தானேறி
பாதாளலோகத் தடவரையைவிட்டகன்று
காடுகடந்து கடியவனந்தான்கடந்து
கொல்லிமலைகடந்து கு குலைகடந்து
காணுமுக்கோப்புகளும் கமுகுவனந்தான்தாண்டி
கமலவல்லியாளிருக்கும் கதலிவனம்புகுந்தார்
முந்திகடோர்க்கஜனும் முடுகியேயோடிவந்து
வீதியும்வீதி தெருவும்பலகடந்து
கமலவல்லிதானிருக்கும் கனகமணிமண்டபத்தே
மாதாவுக்கேற்ற மலர்தூவிதெண்டனிட்டான்
கைகட்டிவாய்புதைத்து கடோர்க்கஜனேதுரைப்பான்
அபிமனும்சுந்தரியும் அரவானுந்தொந்திசெட்டி
சேனைத்திரளுடனே சென்றார்மணம்பொருந்தி
நம்முடையவனமருகே வந்தார்காணாச்சியரே
மைந்தர்வந்தசேதி மாதாவுந்தான்கேட்டு
ஆயிரம்பேராக்ஷதரை அனுப்பினளெதிராக
அழைத்தோடிவாருமென்று அனுப்பினாப்பொழுது
அப்படியேவந்தார்கள் ஆயிரம்பேர்ராக்ஷதரும்
எதிராகவந்து எழுந்திருங்கோளென்றாரே
இப்படியேதானெழுந்து அனைவோரும்வந்தார்கள்
தாயார்கமலவல்லி சதிரிலேதானிருந்தாள்
ஆனைவிட்டுத்தானிறங்கி அபிமன்னராஜாவும்
கல்லரவான்தொந்திசெட்டி நாலுபேர்தங்களுடன்
அம்மானைசுத்திவந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
தெண்டனிட்ட பிள்ளைகளை சீராயெடுத்தணைத்து
இருக்கச்சிங்காதனங்களிட்டாளெதிராக
அபிமன்னாரும் அழகியகண்டிதானிறங்கி

பாதசரணமென்று மலர்தூவிதெண்டனிட்டாள்
வந்துபணிந்தநல்ல மருமகளைக்காலெடுத்து
வாழ்த்தியெடுத்தணைத்து மாளிகையில்கொண்டுசென்று
பாலும்பழமும் பசுந்தேனும்சர்க்கரையும்
கூட்டிக்கலந்து கொடுத்தார்கள் தாதியர்கள்
போசனமுங்கறியும் போட்டுண்டாளப்போது
கல்யாணகாரியங்கள் காட்சிகளானதெல்லாம்
ஒன்றுங்குறையாமல் உரைத்தானே நல்லரவான்.
அவ்விசேஷங்கேட்டு அம்மாள்கமலகன்னி
நகைத்துதலையசைத்து நன்றாச்சுதென்றாளே

அரவான்சொல்வது,

துரியோதனனுடனே சேரப்பிறந்தார்கள்
குருடனிடபுத்திரர்கள் கொற்றவர்களெல்லோரை
பாலனபிமனுமே பந்தியாய்க்கட்டிவைத்தான்
கொள்ளைசுந்தலக்குணனை குடுமைவைத்துத்தலைசிரைத்து
ஆயிரம்பெருவிளக்கை அவன்தலையிலேற்றிவைத்து
அரசாணிக்காலுடனே அவனையேகட்டிவைத்து
பார்த்திருக்கமங்கிலியம் தரித்தோமோதாலே
பின்னையுமுண்டான பேச்சுவகையுள்ளதெல்லாம்
ஒன்றுங்குறையாம லுரைத்தானரவானும்

கமலகன்னி சொல்வது,

கேட்டாள்கமலகன்னி இருநகையுடன்தானகைத்து
சந்தோஷப்பட்டு தலையசைத்தாள்கமலகன்னி
(அப்போ) பொழுதுவிடியவே பொற்கொடியுந்தானெழுந்து
பதினாயிரங்கோடி பத்துலட்சம்ராட்சதரை
உடனழைத்துதம்பியை ஊர்கோலங்காட்டுமென்றாள்
கடோர்க்கஜனைத்தானழைத்து காரியத்தைப்பாருமென்றாள்
அப்படியேநல்லதென்று அரவான்கடோர்க்கஜனும்
பந்தல்கொளுத்துமென்றார் பட்டணங்கள்சுத்திவர
தீவட்டிகொளுத்துமென்றார் தெருவெங்கும்சுத்திவர
கொட்டாடவிரன்மேளம் கோடையிடிபோலே
கொண்டுவந்தாருலவட்டம் கோடானகோடியுண்டு
யானைகுதிரைகளும் ஆள்பேருராணுவமும்
சேனைபரிகலமும் சேர்ந்துவந்தராணுவமும்
எல்லோருங்கூடி இயல்கோலம்வந்தார்கள்

அபிமன்னனும் சுந்தரியும் அரண்மனைக்கு வருவது,

மாப்பிள்ளையும்பெண்ணும் மகிழ்ச்சியுடன்வந்தார்கள்
ஆச்சியுடன்பெண்ணும் அரண்மனையினுள் புகுந்து
ஆலாத்திதாம் அரிவையருந்தானெடுத்து

அறியாதபாலனென்று அஞ்சாமல்கொல்வார்கள்
குழந்தையென்றும்பாராமல் கொல்லத்துணிவார்கள்
அறியாதபாலகனையவர்களென்னசெய்தாரோ
என்செய்வேன்வாளபிமா எழில்விஜயன்தன்மகனே
காணும்படியில்லையோ காவலர்கள்வீரியனே
பார்க்கும்படியில்லையோ பார்த்தன்மகனாரே
என்றைக்குக்காண்பே னினிய அபிமர்தனை
மகனையிழந்துநான் மண்ணிலிருப்பதில்லை
மாரும்படிபொழிய மண்ணிலிருப்பதில்லை
உன்னையிழந்து உயிருடனேயிருப்பேனோ
அக்கினியைக்கண்ட அரக்கதுபோல்தானிருகி
வெப்பிலைக்கண்ட மெழுகதுபோல்தானுருகி
பார்த்தவழிகளெல்லாம் வேற்றுவழியாக
கண்டவிடமெல்லாங் காளையபிமாவென்று
அபிமனுடனிற்கு மாயிரந்தோழர்களை
அந்தப்-பிள்ளைகளைக்கட்டி புலம்பியழுதுகொண்டு
இப்படியாகயிருக்குமந்தவேளையிலே

தூதன்வருவது.

பம்பைநதிக்கரையில் பார்வேந்தர்தாமிருந்து
ஒரு-தூதனைக்தானும் துரிதமுடன்தானழைத்து
ஆச்சிசுபத்திரைக்கு அபிமர்வந்தசேதியைத்தான்
சொல்லுமென்றுசொல்லிச் சுறுக்காகத்தூதுவிட்டார்
தூதுவனுமோடிவந்து சொன்னான்சுபத்திரைக்கு
கேட்டாள்சுபத்திரையும் கிரீடிகள்வந்தசேதி
பந்தலலங்கரித்துப் பாரித்தாளெத்திசையும்
மணக்கோலந்தான்வரவே மங்கைநல்லாள்செய்தாளே
ஆலாத்திதான்கரைத்து அடைவாசவைத்திடுவாள்
இப்படியாகயிவரிருக்கும்வேளையிலே

அபிமன்னன் அரண்மனைசேர்ந்தது.

அங்கேயபிமனு மன்பாகசுந்தரியும்
அரவான்கடோற்கஜனு மானதம்பிநால்வருமே
சருந்நடந்து கரியமலைதான்கடந்து
ஆனைக்குந்தியூரருகே அடைவாசவந்தமர்ந்தார்
சம்புவனுமப்பொழுது சாட்டிப்பறையறைந்தான்
அபிமன்தானென்று அறைந்தான்பறையோசை
சுபத்திரையாள்கேட்டுச் சொகுசாய்மனமகிழ்ந்து
பட்டணத்திலுளளோரெல்லாங் கேட்டுமனமகிழ்ந்தார்

அமுதுண்டபிற்பாடு ஆயிழைமாரோடிவந்து
கைக்குநீர்வார்த்தார்கள் கலசத்திளமுலையாள்
வெள்ளிலைக்கற்பூரம் வேண்டும்படியளித்து
மக்களேநீங்களிப்போ மாளிகைக்குப்போய்வாரும்
என்றுவாழ்த்திவிடைகொடுத்து வழிவிட்டனுப்பலுற்றாள்
அபிமன்னனோடிவந்து அண்ணர்தனைத்தெண்டனிட்டான்
தெண்டனிட்டதம்பியனைத் தீவிரமாய்த்தானெடுத்து
வாயாரவாழ்த்தினார் மன்னவர்கள்மூவர்களும்
கொம்பனையாள்சுந்தரியும் கொழுநர்க்குத்தெண்டனிட்டாள்
புத்திமதியுரைத்து பொற்கொடியையில்லுமென்றார்
அங்கேவிடைகள்பெற்று அலங்கைகன்னூடர்
காடுகடந்துகடுகெனவேவாரார்கள்
தங்கள்தங்கள்வீட்டகத்தே தாம்வேந்தர்போய்ச்சேர்ந்தார்
ஆச்சிரபத்திரையு மபிமருஞ்சுந்தரியும்
ஆனைகுந்திப்பட்டணத்தி லாயனருளாலே
ஆயனருளாலே அழகாகவந்திருந்தார்
அபிமன்னன்மாலைதனை யன்பாகவச்சிவிட
புவிமன்னரெல்லோரும் போதமிகப்படிக்க
குற்றங்கள்வாராமல் குறைவொன்றும்கோராமல்
இக்கதையைக்கற்றவர்க ளின்பமுடன்வாழி
ஆதிபரமசிவ னடியார்மிகவாழி
சோதிதிருமால் தொல்லுலகிலேவாழி
வாழிவாழியென்று வரமளித்தாரீச்சுரனார்

வாழிவிருத்தம்,

மன்னவர்வாழிவாழி மறையவர்தானும்வாழி
தென்னவர்வாழிவாழி சிவனடியார்கள்வாழி
மன்னவாவாழிவாழி மாதுசுந்தரியும்வாழி
உன்னிதஞ்சொரியுமாய னுறுபதம்வாழிவாழி

புகழேந்திப்புலவர் திருவாய்மலர்ந்தருளிய

அபிமன்னன் சுந்தரிமாலை

முற்றுப்பெற்றது,

---

